# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...




KALKI • 24.01.2010 • ரு.10.00 • 96 பக்கங்கள்

தி.மு.க.வில்
வெயிட்டிங்
லிஸ்ட்!

வீடு
வாசல்
வசந்தம்!

ஹவுசிங் ஸ்பெஷல்!



# உள்ளே...


4 இமேஜுக்கு அப்பாற்பட்டவன் -கரண்

6 வெற்றிகர வீட்டு லோன்!

12 அடுக்குமாடிக் குடியிருப்பு வாங்கப் போகிறீங்களா?

62 கடவுள் வந்துபோகும் வீடு

68 ஸ்ரீலலிதா

78 கற்பனை கஷ்டங்கள்

90 ட்விட்டர் கதை - போட்டி முடிவுகள்

# தி.மு.க.வில் வெயிட்டிங் லிஸ்ட்!

கட்சிப் பொறுப்பு மற்றும் அமைச்சர் பொறுப்பு ஆகியவற்றுக்காக ஆளும் கட்சியில் காத்திருப்போர் பட்டியல் நீளமாகி வருகிறது. குறிப்பாக ம.தி.மு.க. விலிருந்து வந்த கண்ணப்பன், எல்.கணேசன், செஞ்சி ராமச்சந்திரன், கே.எஸ்.ராதாகிருஷ்ணன் ஆகியோர் தங்களுக்கு, ''ஏதேனும் கட்சிப் பொறுப்பு கொடுக்கப்படும்'' என்ற எதிர்பார்ப்பில் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அதுவும் கண்ணப்பன் தமது சட்டமன்ற உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்துவிட்டு தி.மு.க.வில் இணைந்தார். மீண்டும் போட்டியிடும் வாய்ப்பும் கொடுக்கப்படவில்லை. திருச்செந்தூரில் வென்ற அனிதா ராதாகிருஷ்ணன், கருப்பசாமி பாண்டியன், மதுரை கௌஸ்பாஷா, வி.வி.துரைசாமி ஆகியோர் அமைச்சர் சான்ஸ் அடிக்குமா என்று எதிர்பார்க்கிறார்கள். ஆனால், அமைச்சரவையில் நீக்கலோ, சேர்த்தலோ இருக்காது என்கிறது ஒரு தகவல். பொதுப் பணித்துறையை மீட்க துரைமுருகன் தொடர்ந்து முயற்சிக்கிறார். ''அனிதா ராதா கிருஷ்ணனுக்கு ஏதாவது கட்சிப் பொறுப்பு கிடைக்கலாம்'' என்கிறார்கள். ''எங்கள் இயக்கத்தில் கண்ணப்பன் போன்றோர் ராஜமரியாதையுடன் வலம்வந்தார்கள். முதுகில் குத்தி விட்டுப் போன அவர்கள் தி.மு.க.வில் நாதியற்று இருக்கிறார்கள்'' என்று கடுகடுக்கிறார் ம.தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

* கண்ணப்பன்
* செஞ்சி ராமச்சந்திரன்
* தங்கபாலு

குத்து, வெட்டு, கொலை என்று தொடர்ந்த அ.தி.மு.க. உட்கட்சித் தேர்தல் ஒரு முடிவுக்கு வந்து கொண்டிருக்கிறது. இப்போது மாவட்டச் செயலாளர் தேர்தல்(?) நடக்கிறது. தலைமை யாரை கைகாட்டுகிறதோ அவரே மாவட்டச் செயலாளராக வர முடியும். இதைச் சம்பந்தப் பட்டவர்களுக்குச் சொல்லி, தலைமையின்

விருப்பத்தைத் தேர்தல் அதிகாரிக்கும் சொல்பவர் சசிகலா வின் உறவினர் டாக்டர் வெங்கடேஷ். வேறு யார் மனுதாக்கல் செய்தாலும் வாபஸ் வாங்க வேண்டியதுதான். தென் சென்னைக்கு, தலைமை யின் விருப்பம் சைதைத் தொகுதி எம்.எல்.ஏ. செந்தமிழனாம். ஆனால், ஆதிராஜாராமும் களத்தில் இருக்கிறார். ஜாதிரீதியாகவும், எந்தவித சர்ச்சைக் கும் ஆளாகாதவருமான செந்தமிழன்தான் மாவட் டச் செயலாளர்'' என்று சொல்கிறார்கள் அ.தி.மு.க. பிரமுகர்கள்.

'கூட்டணிக்கு ரெடி'' என்று விஜயகாந்த் அழைத்தும், தங்கபாலு, ''நாங்கள் தி.மு.க.வோடு உறுதியான நட்பில் இருக்கிறோம்; 2011ல் கூட தி.மு.க.வுடன்தான் கூட்டணி'' என்று அறிவித்திருக் கிறார். அரசியலில் ஒரே இரவில் என்ன வேண்டு மானாலும் நடக்கும். பா.ஜ.க.வில் ஐந்து வருட பதவி சுகம் அனுபவித்த தி.மு.க., அதைத் தூக்கி எறிந்து காங்கிரஸுடன் கூட்டணி இணைந்தது மறந்து போனதா? எனவே, கருணாநிதியை குளிர் விக்க தங்கபாலு ஏதோ பேசுகிறார்'' என்கிறார் தே.மு.தி.கவின் மூத்த பிரமுகர் ஒருவர்.

**- சஞ்சயன்**







# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

**ஆசிரியர் குழு :**
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

**விளம்பரப் பிரிவு :**
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

**சந்தா பிரிவு :**
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

**விற்பனை பிரிவு :**
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
**www.kalkionline.com**

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
**www.sangapalagai.com**

**சந்தா விவரம் (ஒரு வருடம்) :**
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

-கரண்

"எனக்கு ஹீரோ ஆசையெல்லாம் கிடையாது. நல்ல நடிகன் என்று பெயரெடுத்தால் மட்டும் போதும் என்றுதான் நினைத்தேன்" என்று அதிரடியாகத் தொடங்குகிறார் கரண்.

**வில்லனாக இருந்து ஹீரோவாக மாறுவதில் உங்களுக்குப் பிரச்னை இருந்ததா?**

''சில படங்களில்தான் வில்லனாக நடித்திருக்கிறேன். அந்தச் சில படங்கள் ஏற்படுத்திய தாக்கம் பெரிய அளவில் இருந்ததுதான் நிறைய நடித்தது போல் தெரியக் காரணம். 'நம்மவர்' படத்தில் நடித்து பல ஆண்டுகளானாலும் இன்னும் யாரும் அதை மறக்கவில்லை. பாசிட்டிவ், நெகடிவ் என்கிற இமேஜ் எதுவும் இல்லாத நடிகனாக இருக்கவே விரும்புகிறேன்.

கேரக்டரில் எனக்கு நல்லது கெட்டது என்ற வித்தியாசம் பெரிதில்லை. புதிதாக இருக்க வேண்டும் என்றுதான் பார்ப்பேன். அதனால் ஹீரோவாக மாறியதில் எந்தப் பிரச்னையும் இல்லை. என்னால் முடியும் என்ற நம்பிக்கையுடன் வாய்ப்பு தந்தார்கள். அந்த நம்பிக்கையைக் காப்பாற்றி விட்டேன்.''

**கதாநாயகனாக உங்களின் அடையாளம் எது?**

''இவர் இப்படித்தான் இருப்பார். இந்த மாதிரியான கேரக்டர்களில்தான் நடிப்பார் என்கிற வட்டத்துக்குள் சிக்குவதில் எனக்கு விருப்பமில்லை. இப்போது உலக சினிமாவைப் பார்த்து வரும் ரசிகர்களை ஏதாவது செய்து ஏமாற்ற முடியாது. பிடிக்கும்படி வித்தியாசமாகச் செய்தாக வேண்டும். அந்த வகையில் மினிமம் கியாரண்டி உள்ள ஹீரோவாக என்னை ஏற்றுக்கொண்டிருப்பது நல்ல விஷயம்.''

**நீங்கள் நடித்த படங்களில் திருப்தி தந்தது எது?**

''நான் தேர்ந்தெடுத்துத்தான் நடிக்கிறேன். நம்மவர் படம் வந்ததும் எனக்கு ஏராளமான வில்லன் வாய்ப்புகள் வந்தன. கமல் சார் என்கிற ஸ்கூலிலிருந்து வந்துவிட்டு ஏனோதானோ படங்களில் நடிப்பதில் விருப்பமில்லை. இதனால் என் படங்கள் வெளியாவதில் அதிக இடைவெளி! ஆனால் கதை, கேரக்டர் விஷயத்தில் கவனமாக இருந்தேன்.

நிறைய படங்கள் எனக்குப் பெயர் பெற்றுத் தந்தன. 'நம்மவர்' தொடங்கி, 'காதல் கோட்டை','காலமெல்லாம் காதல் வாழ்க', 'லவ் டுடே', 'கண்ணெதிரே தோன்றினாள்', 'திருநெல்வேலி' போன்ற பல படங்களில் எனக்கும் நல்ல பெயர் கிடைத்தது. இவ்வளவுக்குப் பிறகுதான் ஹீரோவாக நடித்தேன்.''

**கதாநாயகனாக நீங்கள்...?**

''நான் நாயகனாக நடித்து ஐந்து படங்கள் வந்துள்ளன. முதல் படம் 'கொக்கி'. பார்த்தவர்களுக்கு ஷாக். எல்லா மரபுகளையும் வழக்கமான சினிமா ஃபார்முலாக்களையும் உடைத்துப் போட்ட படம். அடுத்து... 'கருப்பசாமி

**கமல் சார் என்னைக் கண்காணித்து வழி நடத்துகிறார்!**

குந்தகைதாரர்'. இதில் எனக்கு மாறுபட்ட பாஸிடிவ் வேடம். சைக்கிள் ஸ்டாண்ட் வைத்திருக்கும் ஒருவர்தான் நாயகன். யதார்த்தமான பாத்திரம். அடுத்து நீ நகர் படத்தில் முன்னாள் மாணவர் தலைவர். கள்ளச் சாராய வியாபாரி கதாநாயகனாக இருக்க முடியுமா? அப்படி ஒரு கேரக்டரைத்தான் 'காத்தவராய'னில் செய்தேன். 'மலையன்' படத்தில் பட்டாசு தொழிலாளி. இப்படி ஹீரோவாக நடித்த ஐந்து படங்களிலுமே வெரைட்டியான கேரக்டர்கள்தான்.''

**இப்போது நடித்து வரும் படங்கள்...?**

'' 'கனகவேல் காக்க', 'கந்தா', 'தம்பி விட்டேத்தி சுந்தரம்' ஆகிய படங்களில் நடித்து வருகிறேன். கரண் நடிக்கும் படத்தில் ஏதாவது புது விஷயம் இருக்கும் என்கிற நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் இருக்கின்றன. அதை நிச்சயம் என் அடுத்தடுத்த படங்கள் மூலம் தக்கவைத்துக் கொள்வேன்.''

**உங்கள் வளர்ச்சி பற்றி கமல் என்ன சொல்கிறார்?**

''என் முன்னேற்றம் பற்றி அக்கறையுடன் இருக்கும் கமல் சாரிடம் என் ஒவ்வொரு முயற்சி பற்றியும் சொல்வேன். அவர் சரி, தவறுகளைக் கூறுவார். என்னை அவர் எப்போதும் கண்காணித்துக் கொண்டிருப்பதான உணர்வுதான் என்னைச் சரியாக வழிநடத்துவதாக நம்புகிறேன்.'' பூரிப்பு பொங்கக் கூறுகிறார் கரண். கரணின் லட்சியப் பாதை நீளமானது. அவரது பயணம் வேகமானது. குட் லக் கரண்!

- முத்துராமலிங்கம்

# இமேஜுக்கு அப்பாற்பட்டவன்!

'**வே**ண்டி வேண்டி வீட்டுக்கடன் வாங்கக் கூப்பிடுறாங்க. ஆனால் போய் நிக்கும்போது ஆயிரம் விதத்திலே படுத்தி எடுக்குறாங்க' என்று வங்கிகளைப் பற்றிய கசப்பான அங்கலாய்ப்பைக் கேட்டிருப்பீர்கள். பாவம்; அந்த நடுத்தர வர்க்கத்து ஆத்மாக்களுக்கு, தங்கள் சேமிப்பையெல்லாம் வீட்டில் முடக்கிவிட்ட நிலையில் இது வேறு!

ஆனால் வங்கியைக் குறை சொல்வதற்கு முன்னால், வீட்டுக்கடனுக்காக வங்கிகளை அணுகும்போது நாம் எந்த அளவுக்குத் தயார்நிலையில் இருக்கவேண்டும் என்பதைத் தெரிந்துகொள்வது நல்லது. இதில் தெளிவாக இருந்தால் வீட்டுக்கடன் பெறுவதில் கஷ்டம் (குறைந்தது அதிகக் கஷ்டம்) இருக்காது.

வீட்டுக்கடன் அளிக்க வயதுத் தகுதிகளை வங்கிகள் வரையறுக்கக் கூடும். இவ்வளவு வருமானம் இருந்தால் அதிக பட்சம் இவ்வளவு வீட்டுக்கடன்தான் அளிக்க முடியும் என்பதுபோல் வங்கிகள் எல்லைகளை வகுத்திருக்கும். வங்கிக்கு வங்கி இந்த அளவீடுகள் மாறுபடும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். எனவே இதை முதலில் தெரிந்துகொண்டு பிறகு விண்ணப்பத்தை வாங்குங்கள்.

உங்கள் வீட்டுக்கடன் விண்ணப்பம் மற்றும் அது தொடர்பான ஆவணங்களைச் சரிபார்க்க (சில சமயம் இந்தக் கட்டத்திலேயே வங்கி நீங்கள் வாங்க இருக்கும் வீட்டுக்கு நேரடி விசிட் செய்வதும் உண்டு!) கட்டணம் வசூலிக்கிறார்கள். 'ப்ராஸஸிங் கட்டணம்' எனப்படும் இது, நீங்கள் கேட்கும் கடன் தொகையில் 0.25 சதவிகிதத்திலிருந்து 1 சதவிகிதம் வரை இருக்கும்.



# வெற்றிக

ஜவுளிக்கடைகள் தள்ளுபடி அளிப்பது போல, எப்போதோ ஒரு சமயம் சில வங்கிகள் குறிப்பிட்ட காலத்துக்கு இந்தக் கட்டணத்தைத் தள்ளுபடி செய்கின்றன. மிகச்சில வங்கிகள் வீட்டுக்கடன் சாங்க்ஷன் செய்யப்பட்டால் இந்தக் கட்டணத்தைத் திருப்பி அளித்துவிடுகின்றன. (அதாவது தொகை அட்ஜஸ்ட் செய்யப்படும்.) என்றாலும், பொதுவாக இந்தக் கட்டணம் திருப்பி அளிக்கப்படுவதில்லை.

**நீ**ங்கள் கேட்கும் கடன் தொகையை வங்கி அளிக்கும் என்ற கட்டாயம் இல்லை. வேறென்னென்ன கடன்

வைத்திருக்கிறீர்கள்? மாதாமாதம் நீங்கள் செலுத்தும் தவணைகள் என்ன? இந்தத் தகவல்களைத் தயாராக வைத்திருங்கள்.

தவிர, உங்கள் (சேமிப்பு) வங்கிக் கணக்கின் 'சரித்திரம்' ஆராயப்படும். வங்கிக் கணக்கில் சராசரியாக எவ்வளவு பாலன்ஸ் வைத்திருக்கிறீர்கள்? நீங்கள் வழங்கிய காசோலைகள் 'போதிய பணமில்லை' என்று திருப்பி அனுப்பப்பட்டனவா? உங்கள் கடன் அட்டையை ஒழுங்காகப் பயன்படுத்தியிருக்கிறீர்களா? நீங்கள் வருமான வரி கட்டுபவர்களாக இருந்தால் (அப்படியில்லையென்றால் அதிகத் தொகைக்குக் கடன் தரமாட்டார்கள்) கடந்த மூன்று வருட 'இன்கம் டாக்ஸ் ரிட்டன்களின்' பிரதிகளை அளிக்க வேண்டும்.

வீடு கட்டும் நிலம், வாங்கத் தகுந்ததா என்பது குறித்து (அதாவது நீங்கள் வீட்டை வாங்கும் நபருக்கு அந்த நிலத்தை விற்கும் தகுதி உண்டா என்பது குறித்து) வழக்கறிஞர் ஒருவர் உறுதி அளிக்க வேண்டும். யாரோ ஒரு வழக்கறிஞர் இல்லை! வங்கி தனக்கென வைத்திருக்கும் வழக்கறிஞர்கள் குழுவிலிலுள்ள ஒருவரிடமிருந்துதான் கருத்து (லீகல் ஒபினியன்) பெற்று வங்கிக்கு அளிக்க வேண்டும்.

நீங்கள் வாங்கும் நிலம் அல்லது வீட்டுக்கு முப்பது வருட வில்லங்கமில்லா சான்றிதழை (No Encumbrance Certificate), பதிவுத் துறைக்கு விண்ணப்பித்து, பெற்று, வங்கிக்கு அளிக்க வேண்டும்.

பெரும்பாலும் ஒருவர் கியாரண்டி தேவைப்படும். அப்படி ஜாமீன் அளிப்பவரின் வருமானமும் பலவிதங்களில் சரிபார்க்கப்படும்.

வீடு உங்களுடையதுதான் என்றாலும், வீட்டுக்கடன் வழங்கிய வங்கி, அதை இன்ஷ்யூர் செய்து அதற்கான ப்ரிமீயத்தை மறக்காமல்

# வீட்டு லோன்!



உங்களிடமிருந்து வசூலித்துக் கொள்ளும்.

வங்கிக்கென்றே மதிப்பீட்டாளர்கள் உண்டு. அவர்களது மதிப்பீட்டின் அடிப்படையில்தான் கடன் தொகையை வங்கி நிச்சயிக்கும்.

கணக்கில் வராத தொகையை (கறுப்புப் பணம்) நிலம் அல்லது



வீட்டை விற்பவருக்கு அளிக்கவேண்டாம். அது சட்டமீறல் என்பதோடு, ஆவணத்தில் தொகை குறைவாகக் குறிப்பிடுவதால் வங்கி அளிக்கும் கடன் தொகையும் குறைந்துவிடும்.

வங்கிக்கடனை மட்டுமே முழுவதுமாக நம்பி நீங்கள் வீடோ ஃப்ளாட்டோ வாங்கிவிட முடியாது. பத்திலிருந்து இருபது சதவிகிதம் தொகையை நீங்கள் கையைவிட்டுக் கட்டியாக வேண்டும். சில வங்கிகளில் உங்கள் பங்கை (இதை 'மார்ஜின் மணி' என்கின்றனர்) முதலில் கட்டிய பிறகுதான் கடனை விநியோகிப்போம் என்பார்கள். பல வங்கிகளில், விற்பவருக்கு நீங்கள் அளிக்கும் ஒவ்வொரு தவணையிலும் பத்திலிருந்து இருபது சதவிகிதம் தொகையை நீங்கள் கொடுக்க, பாக்கியை வங்கி அளிக்கும்.

வீட்டுக்கடனை நீங்கள் அடைக்கும் வரை ஒரிஜினல் விற்பனைப் பத்திரம் வங்கியில் இருக்கும். எனவே தொடக்கத்திலேயே இன்னொரு சான்றிதழ் பெற்ற பத்திரத்தை (Certified true copy) பெற்றுக்கொள்வது நல்லது.

நிலம் வாங்கி அதில் வீடு கட்டுவதற்காக வங்கியில் கடன் வாங்கினால், நிலத்தை வாங்கிப் போட்டுவிட்டு மிகவும்

**வங்கிக்கடனை மட்டுமே முழுவதுமாக நம்பி நீங்கள் வீடோ, ஃப்ளாட்டோ வாங்கிவிட முடியாது.**

நிதானமாக அதில் வீடு கட்டலாம் என்று நினைத்துவிடாதீர்கள். நிலம் வாங்கிய சிறிது காலத்துக்குள் (பெரும்பாலும் இரண்டு வருடங்கள்) வீடு கட்டத் தொடங்கிவிட வேண்டும் என்ற நிபந்தனையை விதிக்கின்றன பல வங்கிகள்.

போதுமாங்க... இனி உங்க லோன் படையெடுப்பைத் தொடர வேண்டியதுதான். ஆல் த பெஸ்ட்!

**- அருண் சரண்யா**

இணையில்லா வைரங்கள்

விலைமதிப்பில்லா தருணங்கள்



**80 வருட பாரம்பரியம்**
**இப்பொழுது சென்னையில்**







ஜனவரி 18 முதல்

பிரத்யேகமான

**புதிய நகை மாளிகை**

59, டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை, மைலாப்பூர்,
சென்னை-4

"KAIRASI"

# N. GOPALDAS

JEWELLERS SINCE 1929

New No. 59, Dr. Radhakrishnan Salai
Mylapore, Chennai-4, Tel: +91 44 32986896

- 36, Chinnakadai Street, Tiruchy - 620002, ✆ 0431 2704061
- 02, Collectors Office Road, Tiruchy-1, ✆ 0431 2400161

www.gopaldasjewellers.com, e-mail: gopaldas@gopaldasjewellers.com



• பா.அசோக், திருவில்லிப்புத்தூர்

*ஆங்கில முத்தம் - தமிழ் முத்தம். ஒப்பிடுக?*

வெள்ளைக்காரனுக்கு, முத்தம் கொடுப்பது, சாதம் சாப்பிடுவது போல சகஜம்.நமது முத்தம் காதலன், காதலி மட்டுமே பறிமாறிக் கொள்ளும் பிரசாதம்.ஆங்கில முத்தத்தில் இதழ்கள் மட்டுமே இணையும். தமிழ் முத்தத்தில் இதயமும் இணையும்.!

• எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்

*தேங்காய்க்கு மட்டும் எப்படி சார் குடுமி முளைச்சது?*

உள்ளேயிருக்கும் 'வழுக்கையை' மறைக்க வைத்துக் கொண்ட 'WIG' மேலும் தென்னை மர உச்சியில் காய்ப்பதால் வந்த 'உச்சிக் குடுமி'!

• சுமதி, வேலூர்

*அதியமான் அவ்வையாருக்குக் கொடுத் நெல்லிக் கனி கிடைத்தால், நீங்கள் அதை யாருக்கு தருவீர்கள்?*

ஆஸ்கார் விருது, அமெரிக்க அதிபர் வீட்டு விருந்தில் இசை என்று தமிழனை உலக உச்சிக்கு கொண்டு போன, அதி(ச)யமான் ஏ.ஆர்.ரெஹ்மான் உள்ளங்கையில் வைப்பேன் - அந்த நெல்லி கனியை.!

• ரமா, விழுப்புரம்

*நம்மைப் போலவே உலகில் ஏழு பே இருப்பார்கள் என்கிறார்களே.உங்களைப் போன் ஒருவரைப் பார்க்க நேர்ந்தால் என்ன செய்வீர்கள்*

'நின்னொடு போக பாக்கி ஐவரானோம்' என்று சொல்லி அவனை ஆரத்தழுவி விட்டு ,இருவரும் சேர்ந்து மீதி அஞ்சு பேரைத் தேடுவோம்.!

# 'க்ளிஸேரியன்' பிள்ளை!

• அ.அப்துல் காதர், மே.தாம்பரம்

*துன்பம் எப்போது பிறக்கிறது?*

ஆசை, நெஞ்சை அறுக்கும் 'ஸிஸேரியன்' தொல்லை. அதைப் 'பற்று மாதம்' சுமந்தால் அழு படி பிறக்கும் 'க்ளிஸேரியன்' பிள்ளை.!

• மஞ்சுதேவன், அயிரோலி

*அமரர் தேவனின் படைப்புக்களைப் படிக்கு போது ஏற்படும் சந்தோஷத்தை, எதற்கு ஒப்பி லாம்?*

'மாசில் வீணையும் மாலை மதியமும்... பொ கையும் போன்றதாம்-வாசகன் மகிழ்ச்சி வாசிக்கை யில் தேவனை'!

• பவித்ரா, புதுதில்லி

*அன்றைய காதல். இன்றைய காதல். விளக்க ப்ளீஸ்?*

அன்றைய காதல் அப்படியே

கிரேஸியைக் கேளுங்கள்

இருக்கும் அதி
சய தாஜ்-மஹால் 'சல
வைக் கல்'. இன்றைய
காதல் அடிக்கடி மாற்றும் 'சல
வைத் துணி!'

• **கலாவதி ,பெங்களூர்**

**ஒட்டாத உறவு எது?**

லெட்டருக்கு ஸ்டாம்பு ஒட்டணும். ஈ-மெயிலும் ஒரு வகையில் லெட்டர் தான். ஆனால் ஸ்டாம்பு ஒட்ட வேண்டாம். அந்த வகையில் ஈ-மெயிலுக்கு ஸ்டாம்பு ஒட்டாத உறவு!

• **த.சத்தியநாராயணன், அயன்புரம்**

**'கரும்பு தின்னக் கூலி' என்று எதைக் கூறுவீர்கள்?**

'வரதட்சிணை!'

• **ஆர்.செண்பகவல்லி, ஸ்ரீவில்லிப்புத்தூர்**

**'இருக்கு ஆனா இல்லை' அது என்ன?**

'ஆ'வன்னா எழுத்து. உங்கள் கேள்வியிலேயே பதில் 'இருக்கானால் இல்லை'. சேர்த்துச் சொல்லும் போது குற்றியலுகரப் புணர்ச்சியால், இருக்கும் 'ஆ'னா, கண்ணுக்கு இல்லாமல் போகிறது. ஆண்டவன் என்கிற 'ஆ'வன்னாவும் அப்படித்தான். நம்மாழ்வார் சொன்னது போல 'உளனெனில் உளன். இலனெனில் இலன்'!

• **அபராஜிதா கண்ணன், சென்னை**

**வியப்புக்கும் , மலைப்புக்கும் என்ன வித்தியாசம்?**

எல்லாமே இளமையில் வியப்பு. முதுமையில் மலைப்பு!



# அடுக்குமாடிக் குடியிருப்பு வாங்கப்போகிறீங்களா?

**வாழ்நாளில் அடுக்குமாடிக் கட்டடத்தில் ஒரு ஃப்ளாட்டாவது வாங்கிவிட வேண்டும் என்று கனவு இருந்தால் சிலவற்றைக் கவனத்தில் கொள்ள வேண்டும். அவை என்ன?**



- ஒரு ஃப்ளாட்டுக்கு நீங்கள் சொந்தக்காரர் ஆகவேண்டும் என்றால், முதலில் அந்தக் கட்டடம் எழுப்பப்படும் நிலத்தில் உங்களுடைய 'பிரிக்கப்படாத பங்கை' நீங்கள் வாங்கியிருக்க வேண்டும். அத்தனை ஃப்ளாட்தாரர்களின் தனித்தனி பிரிக்கப் படாத பங்குகளின் சதவிகிதத்தைக் கூட்டினால் விடை நூறு என்று வரவேண்டும். அப்போதுதான் அது சரியான கணக்காகும்.
- நிலத்தின் இந்தப் பகுதி இந்த ஃப்ளாட்காரருக்குச் சொந்தம் என்றெல்லாம் பிரிக்கப் படாமல் பத்திரத்தில் மட்டுமே நம்முடைய இந்தப் பங்கு குறிப்பிடப்பட்டிருக்கும். இதனால்தான் இதை 'பிரிக்கப்படாத பகுதி' என்கிறார்கள்.
- வீடு கட்டித் தர முன்வரும் நிறுவனம் தன் பெயரை மட்டும் எழுதி நிறுத்திக் கொள்ளாமல், அதன் பதிவு அலுவலகத்தின் முழு முகவரியையும் பத்திரத்தில் குறிக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரே பெயர் கொண்ட இரு நிறுவனங்களால் நமக்கு இலேசான சிக்கல் ஏற்படுவதைக்கூட இதன் மூலம் தவிர்க்கலாம்.
- அடுக்கு மாடிக் குடியிருப்புகளைக் கட்டித்தரும் நிறுவனம் இந்தப் பணியைத் தான் மட்டுமல்லாது தன் வாரிசுகள், பிரதிநிதிகள் மற்றும் தங்கள் நிறுவனத்தை வேறு எவரிடமாவது விற்றுவிட்டால் அவர்களும் இந்தப் பணியை பூர்த்தி செய்து கொடுப்பார்கள் (Including our successors/ Assigness/Representatives) என்ற வாக்

கியமும் பத்திரத்தில் இடம்பெற்றிருக்க வேண்டும். அப்போதுதான் குறிப்பிட்ட நிறுவனத்தை யாருக்காவது அவர்கள் விற்று விட்டால்கூட நமக்குச் சட்டச்சிக்கல் இல்லாமல் போகும்.

● உங்களுக்கு இரண்டாவது மாடியில் ஒரு பக்கமாக இருக்கக்கூடிய பி-1 என்ற ஃப்ளாட்டைத்தர, கட்டடத்தைக் கட்டும் நிறுவனம் ஒத்துக் கொண்டிருக்கலாம். இதில் சிக்கல் வராதிருக்க, நீங்கள் வாங்க விருப்பதற்கான ஃப்ளாட்டின் எண்ணை மறக்காமல் பத்திரத்தில் குறிப்பிடவும். உருவாகவுள்ள ஃப்ளாட்களின் (அவற்றின் எண்களும் குறிக்கப்பட்ட) வரைபடம் ஒன்றையும் வாங்கி வைத்துக்கொள்ள மறக்க வேண்டாம்.

● ஒரு அட்வான்ஸ் தொகையைத் தந்தவுடன், ஒதுக்கீட்டுக் கடிதம் மற்றும் கட்டுமான ஒப்பந்தப் பத்திரத்தை ஃப்ளாட் கட்டிக்கொடுக்கும் நிறுவனம் நமக்களிக்கும். இது உரிய ஸ்டாம்ப் பேப்பரில் இருக்குமாறு பார்த்துக்கொள்வது நல்லது.

● ஃப்ளாட் கட்டித்தர, மொத்தம் எவ்வளவு தொகையை நீங்கள் அளிக்க வேண்டும், அதில் எவ்வளவு தொகையை முன்பணமாகத் தருகிறீர்கள் என்பதையெல்லாம் நீங்கள் கட்டாயம் குறிப்பிட்டிருப்பீர்கள். ஆனால் அது மட்டும் போதாது. அந்தத் தொகையில் நிலத்தின் விலை, பதிவுக்கட்டணம், ஸ்டாம்ப் டியூட்டி, கட்டுவதற்கான தொகை, விற்பனை வரி, (மெட்ரோ) நீர் இணைப்புக்கான கட்டணம், கழிவுநீர் இணைப்புக்கான தொகை ஆகியவையும் அடங்கும் என்பதை இந்தப் பத்திரத்தில் சுட்டிக்காட்டி, எழுத்து மூலமாக அதை உறுதி செய்து கொள்வது நல்லது.

● கட்டட நிர்மாணத்துக்குத் தேவைப்படும் பொருள்களின் விலை உயர்ந்து விட்டிருந்தால், அதற்காக எவ்வித அதிகப்படி தொகையையும் உங்களிடமிருந்து, கட்டடம் கட்டுபவர் வசூலிக்கக் கூடாது என்ற கண்டிஷனையும் மறக்காமல் பத்திரத்தில் சேர்த்துக் கொள்ளுங்கள்.

குல்லு

● எந்த தேதிக்குள் அடுக்குமாடிக் கட்டிடம் கட்டி முடிக்கப்படும் என்பதையும் குறிப்பிட வேண்டும்.

● ஏற்கனவே நம்பகத்தன்மைக்குப் பெயர் பெற்ற நிறுவனத்தையே நாடுவது நல்லது. அந்த நிறுவனம் ஏற்கனவே கட்டி முடிக்கப்பட்டிருக்கும் அடுக்கு மாடிக் கட்டடம் ஒன்றை நேரடியாகச் சென்று பாருங்கள். அந்த நிறுவனத்தின் மூலம் ஃப்ளாட் வாங்கியுள்ள சிலரைச் சந்தித்து, அவர்களது அனுபவங்களைக் கேட்கலாம்.

● கட்டடம் தரமான பொருட்களால் எழுப்பப்படுகிறதா? (உங்களுக்கு இதில் அனுபவம் இல்லையென்றால் ஒரு சிவில் இஞ்சினியரை அணுகலாம். சரிபார்க்க அவரை அமர்த்தும் செலவை எல்லா ஃப்ளாட் ஓனர்களும் பகிர்ந்துகொள்ள முயற்சிக்கலாம்.

● நாம் வாங்கவிருக்கும் ஃப்ளாட் உள்ள அடுக்குமாடிக் கட்டடத்தின் நிலம், நில உச்ச வரம்பு சட்டத்துக்கு உட்பட்டதா? (இந்தச் சான்றிதழை இப்போது அரசு அலுவலகம் வழங்குவதாகத் தெரியவில்லை. எனவே நிலத்தின் சொந்தக்காரர் கைப்பட 'இந்த நிலம் நில உச்சவரம்பு சட்டத்தை மீறவில்லை' என்று உறுதி செய்துகொள்ளுங்கள்).

● பெரும் நகரங்களில், எந்த அளவு அகலம் உள்ள தெருக்களில் எந்த மாதிரியான ஃப்ளாட்டுகள் கட்டிக்கொள்ளலாம் என்பதற்கு விதிமுறைகள் உண்டு. அதற்கு உட்பட்டு ஃப்ளாட்களை எழுப்புகிறார்களா? என்று கவனியுங்கள்.

கட்டடம் முடிந்ததும், முழுவதும் எழும்பியவுடன் மறக்காமல் பெரும்நகர் வளர்ச்சி மையத்திலிருந்து (அல்லது பஞ்சாயத்திலிருந்து) 'ப்ளான்'படிதான் கட்டடம் எழுப்பப்பட்டிருக்கிறது என்பதற்கான சான்றிதழை (completion certificate) கேட்டு வாங்கிக்கொள்ளுங்கள்.



# கல்கி



2010 ஜனவரி 24
விரோதி தை 11
மலர் : 68
இதழ் : 26

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## மது விற்பனை அபரிமிதம்; மருத்துவ காப்பீடு அமோகம்!

ஆளுநர் உரை மீதான விவாதத்தில் பேச எதிர்கட்சித் தலைவர் ஜெயலலிதா சட்டசபைக்கு வந்தது ஆச்சர்யம். வந்ததோடல்லாமல், அர்த்தமுள்ள வகையில் அரசின் செலவினங்களை விமர்சித்தது வரவேற்கத்தக்க மாற்றம்.

தமிழகம் திவாலாகும் விளிம்பில் இருக்கிறது என்று ஜெ. சுட்டிக்காட்டியிருப்பது உரிய நேரத்தில் விடுக்கப்பட்டுள்ள பொறுப்பான எச்சரிக்கை. பா.ம.க. தலைவர் ராமதாஸும்கூட பொருளாதார வளர்ச்சி விகிதத்தில் தமிழகம் வீழ்ச்சியுற்றிருப்பதையும், மிகவும் பின் தங்கியிருந்த பீஹார்கூட குஜராத்தையே விஞ்சும் அளவுக்கு முன்னேறியிருப்பதையும் சுட்டிக் காட்டியிருக்கிறார். ஜெயலலிதாவோ, 90,000 கோடி ரூபாய் கடனைத் தாங்கும் தமிழகம் செலுத்துகிற வட்டி மட்டும் நாளொன்றுக்கு இருபது கோடி என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார். 2005-06ல் 2251 கோடியாக இருந்த பட்ஜெட் பற்றாக்குறை, இவ்வாண்டு 11,824 கோடியைத் தொட்டுள்ளது என்று அபாய மணியை அடித்திருக்கிறார். அரசு பெறும் கடன் தொகை, உற்பத்திப் பெருக்கத்துக்கும் அடிப்படைக் கட்டமைப்பிலும் முதலீடாவதற்குப் பதிலாக, உற்பத்திக்கு உதவாத செலவினங்களில் கரைந்து கொண்டிருப்பதையும் எடுத்துக் காட்டி பேசியிருக்கிறார்.

பா.ம.க. தலைவர் ராமதாஸ், தமது அறிக்கையில், டாஸ்மாக் மூலம் பெறும் வருமானம்தான் அபரிமிதமாகப் பெருகியுள்ளது என்பதை அடிக்கோடிட்டிருக்கிறார். குடிப் பழக்கத்தில் கேரளாவை தமிழகம் விஞ்சிவிடும் நிலையில் இருப்பதாகத் தெரிகிறது.

எதிர்க்கட்சியினரின் இந்தக் கருத்துகள் புறக்கணிக்கக்கூடியவை

இதைப் போட்டுப் பாருங்க
சமாதானம்
விபத்தில் உதவி ஆய்வாளர் மரணம்
பன்னீர் செல்வம்
துரை முருகன்
மைதீன்கான்
என்ன துடைச்சாலும் கறை போகமாட்டேங்குதே



ல்ல. முதல்வர் அவற்றுக்கு உரிய கவனம் அளித்து, நிதி நிலைமை சீராவதற்கான நடவடிக்கைகளை டுக்க வேண்டிய கட்டாயம் இருக்கிறது.

ஆனால், நடப்பது என்ன...? நிதிநிலை அறிக்கையின் மதிப்பீடை செலவுகள் கடந்துவிட்டதால், டுத்த நிதிநிலை அறிக்கைக்கு முன்னதாக, 4078 கோடி ரூபாய் செலவுகளுக்கு, சட்டசபையில் ரு துணை மானிய கோரிக்கை தாக்கலாகியிருக்கிறது! இந்தத் தொகைக்கு நிதி அமைச்சர் ழகாகப் பிரித்துப் பிரித்துக் கணக்கு கொடுத்திருக்கிறார். அந்தச் செலவில் கலைஞர் காப்பீட்டுத் ட்டம், இலவச கலர் டீ.வி, புயல் சேத நிவாரணத் தொகை, உணவு மானியச் செலவு, தாகுதி மேம்பாட்டு நிதிக்குக் கூடுதல் ஒதுக்கீடு என்று உற்பத்திக்கு உதவாத செலவுகளே குதி. இவற்றுள் சில செலவுகள் தவிர்க்க முடியாதவையாக இருக்கலாம்; ஆனால் இலவச தாலைக்காட்சி, வேஷ்டி-புடைவை, காப்பீட்டுத் திட்டம் போன்றவை நிர்ப்பந்தச் செலவுகள் ல்ல. அவை மக்களின் வரிப்பணத்தைக் கொண்டு மக்களுக்கு அளிக்கப்படும் சலுகைகள்! லுகைகளைக் கொடுத்தால், திரும்பப் பெற முடியாது; செலவுகள் புதைகுழிபோல் இழுத்துக்கொண்டே பாகும். இவை முதல்வருக்குத் தெரியாத விஷயங்கள் அல்ல. மக்களின் சுயச்சார்பை உறுதி சய்வதே அரசியல் பணி.

மேலும், டாஸ்மாக் விற்பனை அதிகரிப்பு மூலம் தமிழக மக்களின் ஆரோக்கியத்தைக் லைத்துவிட்டு, இலவச மருத்துவக் காப்பீடு திட்டம் அறிவிப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது? ருத்துவ காப்பீடுக்கு மட்டும்தான் முதல்வரின் பெயரைச் சூட்ட முடியுமே தவிர, மது விற்பனைக்கு ல்லவே! ஓய்வு பெறும் முன் மக்களிடையே நற்பெயர் எடுக்க முதல்வர் விரும்புவது புரிகிறது. துவிலக்கை மீண்டும் அமுல்படுத்துவதன் மூலம் அவர் பெறக்கூடிய நற்பெயர் வரலாற்றில் லைக்கும்; வீண் செலவுகளைக் கட்டுப்படுத்தி உற்பத்திப் பெருக்கத்துக்கு வழி செய்தால் பான்னெழுத்துக்களில் அது பொறிக்கப்படும். ○

புத்தகக் கண்காட்சி கோலாகலமாக நடந்து முடிந்து விட்டது. முந்தைய ஆண்டை விட அதிக ஸ்டால்கள், ஏராள மான புதிய புத்தகங்கள், விற்பனை அதி கரிப்பு... என சந்தோஷமான விஷயங்கள் பல. எனினும், அதிர்ச்சியான ஒரு விஷய மும் உண்டு. அது, புத்தகத் திருட்டு.



# ஒண்ணு வாங்கினால் ஒன்பது இலவசமா?

ஜீன்ஸ் அணிந்த ஒரு கல்லூரி மாணவி, தன் கைப்பைக்குள் புத்தகங்களை எடுத்து வைத்துக் கொள்வதை நான் கவனித்துவிட் டேன். அவரை அணுகி, ''பில் போட ணுமா? அந்தப் பக்கம் போங்க!'' என்று நாசூக்காகச் சொன்னேன். அவர் செய்ததை நான் கவனிக்கவில்லை என நினைத்து, ''பில் போட்டாச்சு!'' என்றார் கூலாக. ''எங்கே பில்லைக் காட்டுங்க'' என்றதும், பைக்குள் கையை விட்டு, ஒரு பில்லை எடுத்துக் கொடுத்தார். அது ஒரே ஒரு புத்த கத்துக்கான பில்!'' ''ஒரு புத்தகம் வாங்கினா இத்தனை புத்தகம் ஃப்ரீன்னு நாங்க சொல்லலையே!'' என்று கேலியாக அவரது தவறைச் சுட்டிக்காட்டியதும், எல்லாப் புத்தகங்களையும் வைத்துவிட்டு காசு கொடுத்து வாங்கிய ஒரு புத்தகத்துடன் சைலன்ட்டாக வெளியேறி விட்டார்' என்று கூறினார் ஒரு பிரபல வார இதழ் அரங்கின் பொறுப்பாளர்!

சில ஸ்டால்களில் பதிப்பகப் பெயர் பொறித்த டீ ஷர்ட் அணிந்தும், இன்னும் சில ஸ்டால்களில் சாதாரண உடைகளிலும் ஊழியர்கள் கண்காணித்துக் கொண்டிருந் தார்கள்.

''புத்தகத் திருட்டு அங்கீகரிக்கக்கூடிய அந்தஸ்து உள்ள பண்பு. படிக்கத் திருடுவது பெருமைக்குரியது. என் வீட்டில் உள்ள புத்தகமெல்லாம் திருடிச் சேர்த்தது (அவ் வளவு வாசிப்பு வெறியாம்) என்று எழுத் தாளர்கள் எழுதுவதும் பேசுவதும் கூட, புத்தகத் திருட்டை நியாயப்படுத்தியுள்ளது என்கிறார் ஒரு இலக்கியப் பதிப்பாளர்.

இதுகுறித்து தென்னிந் திய புத்தகப் பதிப்பாளர்கள், விற்பனையாளர்கள் சங்கத் தலைவர் கவிதா சொக்கலிங் கத்திடம் கேட்டபோது, வாச கர்கள் புத்தகங்களை வாங் கிக்கொண்டு திரும்பிச் செல் லும்போது (திருடாதே என் பதை நாசூக்காக) 'புத்தகங்களுக்குரிய பில் களை பத்திரமாக வைத்திருக்கும்படி அடிக்கடி மைக்கில் அறிவுறுத்திக் கொண்டேயிருந்தோம். ஸ்டால்களில் கண் காணிப்புக்குத் தேவையான அளவில் ஆட்கள் வைத்திருப்பது அந்தந்த பதிப்பகத் தினரின் பொறுப்பு. இதை முற்றிலுமாகத் தடுக்க முடியாது. ஆனால் நிச்சயம் கட்டுப் படுத்தலாம்'' என்றார்.

**- எஸ்.சந்திரமௌலி**



# பாரதிதாசன் பல்கலைக்கழகம்

# BHARATHIDASAN UNIVERSITY

TIRUCHIRAPPALLI - 620 024.

Accredited by NAAC at 'A' level among the Universities

The following programmes are offered under regular stream

## 2 Years PG Programme

| M.A. | M.Sc. | M.Tech. |
|---|---|---|
| Tamil<br>English Studies<br>History<br>Women Studies<br>Economics<br>Sociology<br>Human Resource Management | Animal Biotech.<br>Biochemistry<br>Bio-informatics<br>Biotechnolgy<br>Chemistry<br>Eco-Biotech.<br>Geo-informatics<br>Marine Biotech.<br>Marine Science<br>Mathematics<br>Medical Physics<br>Microbiology<br>Physics<br>Plant Biotech. | GIS Applications<br>Geo Remote Sensing & Geo-Informatics<br>Geo-Hydro-Informatics using GIS<br>Information Technology |

**M.B.A.**

Environmental Management
Financial Management

**M.L.I.Sc.**
(B.L.I.Sc. Candidates admitted into 2nd year as a lateral entry)

**M.S.W.** (Specilization in CD, HRM and CLSW)

**M.C.A.**
(3 Year Programme)

**M.Ed.**
(Educational Technology)
(1 Year)

## 5 year Integrated Programme

History
Bio Medical Science
Geo Science
Life Science
Physics (specialization in Material Sci.)

## 6 year Integrated Programme

Bio-Informatics
Bio-technology
Computer Science & Engineering
Geotechnology & Geo Infomatics

**Fast learners can finish the programme earlier than the prescribed period of time**

## PG Diploma Programme

Child Guidance & Counselling
Clean Management Mechanism
Educational Administration (PT)
Effective Communication
English Language Teaching
Fitness Management (PT)
Geo-Matics
Gerontology
Higher Education Technology (PT)
Human Resource Management (PT)
Human Resource Mgt. & Corporate Social Responsibility
Life Skills and Management (FT/PT) (CC in PG)
Micro & Small Enterprise Development (FT/PT)
NGO Management (PT)
Yoga (PT)
வீணை (யாழ்) (PT)
இசைபலகைக்கட்டை (Key Board) (PT)
பாரதிதாசன் படைப்புகள் (PT)

## Diploma Programme

Laboratory Glassware
Machine Operator
Life Skills & Management (FT/PT)
Micro & Small Enterprise Development (FT/PT)
பெரியாரியல் (PT)
நாட்டுப்புற நடனம்
வயலின் (பிடில்) (PT)
நாதசுவரம் (PT)
தமிழிசை (PT)
தப்பாட்டகலை (PT)
மேளம் (PT)

## Certificate Programme

Arabic(PT) French (PT) German (PT)
Life Skills and Management (FT/PT)
Micro & Small Enterprise Development (FT/PT)
Effective Communication
English for Mass Media and Journalism
Techniques on Organic Farming

## Training Package

3 MONTHS PROGRAMME
TOEFL IELTS

**All the programmes will be offered both in Tamil and English**

**For further details please visit our website : www.bdu.ac.in**






'இது என் வீடு' என்று இன்றைய சீனாவில் யாராவது ஒருவர் சொன்னால், அவர் சொல்வது முழு உண்மையல்ல என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். காரணம், அங்கே வீடுகள் வசிப்பவர்களுக்குச் சொந்தமானதல்ல. இன்று இது என் வீடு, நேற்றும் இது என் வீடாகவே இருந்தது என்று சாக்ரடீஸ் போல் தர்க்கம் செய்யலாம். நாளையும் அது உங்கள் வீடே என்பதற்கு எந்த உத்தரவாதமும் கிடையாது. வாழ்வின் நிரந்தரமின்மையை ஒவ்வொரு கணமும் தன் மக்களுக்கு உணர்த்திக்கொண்டிருக்கிறது இன்றைய சீனா.

உங்கள் வீட்டின் வாசலில் சாய் என்னும் சீன வார்த்தை பொறிக்கப்பட்டு விட்டால், அது இடிக்கப்படப்போகிறது என்று அர்த்தம். அந்த இடத்தில் அரசாங்கத் திட்டத்தின்படி ஏதாவது புதிய கட்டட அமைப்பு உருவாகலாம். ரயில் பாதை அமைக்கப்படலாம். சாலை விரிவாக்கப்படலாம். அல்லது, ஒலிம்பிக்ஸ் போல் ஏதாவது நிகழ்ச்சிகள் நடத்தப்படலாம்.

நிலம்,வீடு என்று அனைத்தும் லீசுக்கு மட்டுமே அங்கே கிடைக்கும். இத்தனை ஆண்டுகளுக்கு என்று முன்கூட்டியே எக்ஸ்பயரி டேட் போட்டுவிட்டுத்தான் பத்திரத்தை கையளிப்பார்கள். அந்தத் தேதிக்குள் மீண்டும் அரசை அணுகி, ஒப்பந்தத்தை நீட்டித்துக் கொள்ளலாம். வேண்டாம் என்றால், விலகி விடலாம். அந்த வகையில், சொந்த வீடு வைத்திருப்பவர்கள்கூட, ஒரு வகையில் பார்த்தால், அரசாங்கத்தின் அனுமதியுடன் வாடகையில் இருப்பவர்கள்தாம்.

- ரஷ்யர்கள் மிர் என்று அழைக்கப்பட்ட கம்யூன்களில் வசித்து வந்தனர். தனிப்பட்ட நபர்களுக்கு அல்ல; குழுவினருக்கே நிலம் பொதுவில் அளிக்கப்பட்டது. விவசாயிகள் இங்கே குழுவாக வசித்தனர்; குழுவாக உழைத்தனர். ஆதிகால பொதுவுடைமைச் சமுதாயம் போல், கிடைத்ததைப் பகிர்ந்து உண்டு வாழ்ந்து வந்தனர். ஒவ்வொரு கம்யூனும் ஒரு குடும்பம். ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒரு பொது வீடு.

- ஆர்டிக், க்ரீன்லாண்ட் வாழ் எஸ்கிமோக்கள், 'இக்ளு' என்று அழைக்கப்படும் பனிப்பொந்துகளில் வசிக்கிறார்கள். கிளம்பும்போது, பெட்டியைத் தூக்கிக் கொண்டு, வீட்டை கலைத்துப்போட்டு விட்டு வெளியேறி விடுவார்கள்.

- போர்க் காலங்களில், வீரர்கள் பதுங்கு குழிகளைத் தங்கள் வீடுகளாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். போர் முடிவடையும்வரை, அந்தக் குழிதான் வீடு. பெரிய அகல குழிகளுக்குள் ஒன்றுக்கு மேற்பட்டவர்களும் தங்கி இளைப்பாறுவது உண்டு. வாரக்கணக்கில் மட்டு





மல்ல மாதக்கணக்கில் குழி வீட்டில் பதுங்கியிருக்க வேண்டிய அவசியமும் ஏற்படும்.

- ஆப்பிரிக்கக் காடுகளில் வாழும் பழங்குடிகள் பலர், மரங்களுக்கு இடையில் தொங்கும் வீடுகளை அமைத்துக் கொள்கிறார்கள்.

- பொருளாதார வீழ்ச்சி காரணமாக, அமெரிக்கர்கள் வங்கிக் கடன் செலுத்த முடியாததாலும், வேலை பறி போனதாலும் கான்க்ரீட் வீடுகளை அவர்கள் இழந்துவிட்டார்கள். இருப்பது கார் மட்டுமே. எனவே, தங்குமிடமும் அதுவேதான். எல்லாமே அதில்தான்.

- நடைபாதையில், பெரிய கட்டடங்களின் நிழலில், தெருக்களின் ஓரத்தில் வசிக்கும் மனிதர்களுக்கு இந்த உலகமே வீடு. நம்மை விநோதமாக உற்றுப் பார்த்தபடி அவர்கள் இங்கே வசித்துக் கொண்டிருக்கிறார்கள். வெளியேறச் சொல்லும் வரை அல்லது வெளியேற்றப்படும் வரை.

# இப்படியும் வீடுகள்!





# 17.01.2010 முதல் 23.01.2010 வரை

**மேஷம்:**

பொது பலன்: நினைத்தது நடக்கும் நேரமிது.

பலம் : எல்லாவற்றிலும் ஆரோக் கியமும் மகிழ்ச்சியும் நிலவும்.

பலவீனம் : இப்போதைக்கு இல்லை.

பரிகாரம்: வேண்டியது இல்லை.

**ரிஷபம்:**

பொது பலன்: ரொம்ப உஷாரா இருங்க!

பலம் : விசேஷமாய் ஒன்றுமில்லை.

பலவீனம்: வாக்குவாதம், கொடுக்கல் வாங்கல் பிரச்னை.

பரிகாரம்: நவக்கிரகம் உள்ள கோயிலில் பிரதட்சணம் செய்வது நல்லது.

**மிதுனம்:**

பொது பலன்: சபாஷ்! என்ஜாய்....

பலம்: இல்லறம், நட்பு, தொழில், கல்வி எல்லாம் சூப்பர்.

பலவீனம்: இல்லவே இல்லை.

பரிகாரம்: இனி வரும் காலம் சனி பகவான் வழிபாடு சாலச் சிறந்தது.

**கடகம்:**

பொதுபலன்: ஏழரை சனி விலகி கடவுளின் கருணை கிடைத்திருக்கிறது.

பலம்: வருவாய் கூடும். சமாதானம் நிலவும். டென்ஷன் விலகும். உடல் நலம் சீராகும்.

பலவீனம்: ஏதுமில்லை.

பரிகாரம்: வியாழன்தோறும் குரு பகவானுக்குத் தீபம் ஏற்றி வந்தால் இன்னும் சிறப்படைவீர்கள்.

**சிம்மம்:**

பொதுபலன்: எதிரிகளை வீழ்த்தும் வாரம்.

பலம்: கடன் தொல்லையும், எதிரி தொல்லையும் நீங்கும். பதவி உயர்வு கிட்டும்.

பலவீனம்: கூட்டாளிகள் பிரிவர். குழந்தைகள் இடம் மாறுவார்கள்.

பரிகாரம்: சனி பகவானுக்கு விளக்கு ஏற்றி வாருங்கள்.

**கன்னி:**

பொதுபலன்: எச்சரிக்கையாக இருக்க வேண்டிய காலமிது.

பலம்: குடும்ப வாழ்வு நலமாயிருக்கும்.

பலவீனம்: வழக்கு வரும். உடல் நலம் பாதிக்கும்.

பரிகாரம்: நவக்கிரக வழிபாடு.

**துலாம்:**

பொதுபலன்: மகிழ்ச்சியான வாரம்.

பலம்: உத்யோக உயர்வும், சுப காரியப் பேச்சும், புதிய தொழில் முயற்சியும்.

பலவீனம்: இல்லை.

பரிகாரம்: சனிதோறும் சனி வழிபாடு.

**விருச்சிகம்:**

பொது பலன்: இல்லற வாழ்வில் விட்டுக்கொடுத்துப் போனால் மற்ற வற்றைச் சமாளித்து விடலாம். (செய் வீர்களா?)

பலன்: தூரதேசம் செல்லல், வியாபார முன்னேற்றம்.

பலவீனம்: மறைமுக எதிர்ப்பு, கூட்டாளி விலகல், வழக்கு பின்னடைவு.

பரிகாரம்: நவக்கிரக வழிபாடு.

**தனுசு:**

பொதுபலன்: மன அமைதியும், இறையருளும் கிட்டும்.

பலம்: எல்லாம் நலமே! (விலகிப் போனவர்கள்கூட ஓடி வருவர்).

பலவீனம்: ஏதுமில்லை.

பரிகாரம்: ராகு, கேது வழிபாடு கூடுதல் நலம் தரும்.

# நடக்குமென்பார்;

தஞ்சை பரத்வாஜ்

மகரம்:

பொதுபலன்: எண்ணியது நடக்கும்.

பலம்: உத்தியோக உயர்வு, சத்ரு விலகல், பண வரவு.

பலவீனம்: நீண்ட பயணம்

பரிகாரம்: ஏதும் வேண்டாம்.

கும்பம்:

பொது பலன்: ஒன்றை இழந்து ஒன்றைப் பெற வேண்டி இருக்கும்.

பலம்: மன இருள் நீங்கும். வீடு மாற்றம்.

பலவீனம்: கூட்டாளி விலகல், பாகப்பிரிவினை

பரிகாரம்: சிவ வழிபாடு.

மீனம்:

பொதுபலன்: மன அமைதிக்குப் பஞ்சம் இருக்காது.

பலம்: கடல் கடந்தவர்களின் அனுகூலம், பூர்விகச்சொத்து வந்தடைதல்.

பலவீனம்: நீண்ட தூரப் பிரயாணம், வீடு மாற்றம்.

பரிகாரம்: நால்வரிடம் முறையிடுங்கள் (ராகு, கேது, சனி, குரு).

நடக்கும்

அருணாச்சலத்தின் பார்வை மட்டுமல்லாமல் உடலே சூர்யாவின் முன்னால் அந்த சில நிமிடங்களுக்குக் குவிந்து கிடந்தது.

சூர்யா கதையைத் துவக்குவதற்கு முன்பே கவனமாக மனதுக்குள்ளேயே ஒரு அறையை ஸ்பெஷலாகத் தயார் செய்து, அதில் சேகரின் மரணம் அவனது அம்மாவுக்குத் தான் செய்து கொடுத்த சபதம் அனைத்தையும் தற்காலிகமாக இறுகப் பூட்டி சீல் வைத்தபின்தான் பேசவே துவங்கினான். கிரிஜாவிடம் விவரித்ததுபோல தனக்கேற்றாற்போல சில காட்சிகளை நீக்கிவிட்டு, புதிதாகச் சந்தித்துக்கொண்ட இரு இதயங்களின் கதையாக அதனை மாற்றி விவரித்தான்.



15

# பகல் மீன்கள்

சூர்யா சொல்லச்சொல்ல அருணாச்சலத்துக்குத் தன்னை மீறி விம்மலும் கண்ணீரும் வந்தன.

அதுவரை நெஞ்சை அடித்துக்கொண்டிருந்த ஏதோ ஒன்று முழுவதுமாக விலகியதைப் போலிருந்தது.

நன்றாக மூச்சை இழுத்து வெளியே விட்டார்.

முன்பு ஒருமுறை வைசாக்கிலிருந்து வந்த சில நாட்களில் மகள் தேன்மொழி தோட்டத்தில் வைத்து இதே கதையை விவரித்த சம்பவம் அவருக்கு ஞாபகம் வந்தது.

மூக்குக்கு மேலிருந்த ஃப்ரேமைக் கழற்றி இமைகளில் துளிர்த்த கண்ணீரைத் துடைத்தவர், சட்டென அது ஒரு உணவு விடுதி என்றும் பாராமல் குலுங்கி அழுதார்.

சூர்யா, கிரிஜா இருவருமே அதை எதிர்பார்க்கவில்லை.

''அப்பா... என்ன இது குழந்தை மாதிரி?''

சூர்யாவுக்குக் குற்றவுணர்ச்சி. அவரை எப்படி தேற்றுவது என்று தெரியாமல் கிரிஜாவைச் சங்கடத்துடன் பார்த்தான்.

சற்றொரு நிமிடங்களில் சமாளித்து கண்களைத் துடைத்து, மீண்டும் சகஜ நிலைக்குத் திரும்பிய அருணாச்சலம் எழுந்துகொண்டார்.

சூர்யாவும் எழுந்துகொண்டதும் கிரிஜா அவசரமாக பில்லை எடுத்துக்கொண்டு கவுண்டருக்கு விரைந்தாள். அருணாச்சலம் லாபியை நோக்கி நடக்க, சூர்யா அவரைப் பின்தொடர்ந்து வராந்தாவுக்கு நடந்தான்.

சூர்யாவின் தோளில் அருணாச்சலத்தின் கைவிழுந்தது.

''என் பொண்ணு சரியான ஆளைத்தாம்பா தேர்ந்தெடுத்திருக்கா. கவலைப்படாதே... அவ எழுந்ததும் நானே பக்குவமா எடுத்துச் சொல்லி உன்னைப் பார்க்க அனுமதிக்கறேன். உனக்கு ஒண்ணு தெரியுமா..? இன்னைக்கு நீ மட்டும் இங்க வரலைன்னா உன்னை எப்படியாவது தேடி நானே இங்கே இழுத்துக்கிட்டு வந்திருப்பேன்.''

தோளின் மீதிருந்த கையை எடுத்துவிட்டு, அப்படியே கட்டடத்துக்கு நடுவில் இருந்த தோட்டத்துக்குள் இறங்கிச் சென்ற அருணாச்சலம், அங்கிருந்த செம்பருத்திச் செடியின் மலரின் காம்பைப் பிடித்து சூர்யாவுக்குக் காண்பித்தார்.

''என் பொண்ணோட மனசும் இது மாதிரிதான்ப்பா. அவ என் பொண்ணுங்கிறதுக்காகச் சொல்லலை. நான் அவளைச் சின்ன வயசிலேருந்து கவனிச்சிருக்கேன்.

சின்ன விஷயத்துக்குக்கூட ரொம்பக் கவலைப்படுவா. ஒருநாள் ரெண்டுபேரும் கோயிலுக்குப் போயிட்டு வீடு திரும்பினப்ப, 'இனிமே நான் அந்தக் கோயிலுக்கு வரவே மாட்டேம்பா'ன்னுட்டுக் கதவைச் சாத்திக்கிட்டா. அன்னைக்கு முழுக்கச் சாப்பிடலை. மறுநாள் கேட்டப்பதான் சொன்னா. 'ஏன்டாடி... உள்ள சாமிக்கு மட்டும் கழுத்துல அவ்வளவு நகை போட்டிருக்காங்க... ஆனா வாசல்ல இவ்வளவு பிச்சைக்காரங்க இருக்காங்க. ட்ரஸ்கூட சரியில்லாம ரொம்ப டர்ட்டியா... குழந்தைங்களைக்கூட ஸ்கூலுக்கு அனுப்பாம பிச்சை எடுக்கவைச்சிகிட்டு.. அவங்களைப் பார்க்க பாவமா இருக்குது

டாடி...'ன்னு அழ ஆரம்பிச்சுட்டா. இப்ப அவ இந்த உலகைப் புரிஞ்சுக்கிட்டாலும் அந்த மனசு மட்டும் அப்படியே இருக்கு. ஒருதடவை கார் ஷெட்ல இருந்த குருவிக் கூட்டைக் கலைச்சிட்டேங்கறதுக்காக ஒருமாசம் எங்கூட முகங்கொடுத்துப் பேசாம இருந்தாப்பா. அப்புறம் நானா ஒரு கூட்டை ரெடி பண்ணித் திரும்ப குருவிகள் வந்தப்புறம்தான் பேசவே ஆரம்பிச்சா.

அவ எனக்குப் பொண்ணா பொறந் துட்டாலும் நான் அவளை என் மகளா மட்டும் பார்க்கலை. ஏசுவைப் பெத்த மதர் மேரியோட திருவுருவமாதான் பார்க்கறேன்.

சின்ன வயசிலேருந்து பல துரோகங்கள், அவமானங்கள், சறுக்கல்களைப் பார்த்தவன் நான். எனக்கு அப்பா அம்மா யாரும் சரி யில்லை. அன்புக்காக இந்த உலகத்துல ஏங்கித் தெருத்தெருவா அலைஞ்சிருக்கேன். சொந்தக்காரங்க, ஆம்பளை, பொம்பளை, எல்லாரையும் பார்த்துட்டேன். எல்லார் கிட்டயும் ஒண்ணு பணத்தாசை அல்லது நான்ங்கிற அகங்காரம். எனக்கு வாய்ச்ச மனைவிகூட எல்லாரையும் மாதிரி சுயநலம் பிடிச்சவளாகவும் பணத்து மேல ஆசை கொண்டவளாகவும்தான் இருந்தா. என் மகதான்ப்பா என் வாழ்க்கையில நான் பார்த்த முதல் மனுஷி.''

இதற்குள் அங்கு கிரிஜாவும் வந்துவிட அருணாச்சலம் கிரிஜாவிடம், ''நீ அவகிட்ட போம்மா... நான் இவர்கிட்ட சில விஷயங் களைப் பேசவேண்டியிருக்கு'' என்றார்.

கிரிஜா போன பிறகு அருணாச்சலம் சூர்யாவிடம் தான் பேசநினைத்த விஷயங் கள் அனைத்தையும் வரிசையாகக் கொட் டினார். சின்ன வயசிலேயே அவளுடைய அம்மா ஜாதகத்தில் காதல் கல்யாணம் என இருப்பதைச் சொல்லிச் சொல்லி அவள் மனத்தில் ஆழமாகப் பதிய வைத்ததையும், அதன் காரணமாக அவள் காதலிக்கும் ஆண் களைத் தனக்கேற்றாற் போல் இருக்கிறார் களா, ஒத்துவருவார்களா எனப் பரிசோதனை செய்து அதனால் தனக்குத்தானே சிக்கலை உண்டாக்கிக் கொள்வதையும் நயமாக எடுத் துக்கூறிய அருணாச்சலம், ''அதனாலதான் நான் கேட்டுக்கறேன். கொஞ்ச நாளைக்கு அவளுக்கு நீங்க முழுசா விட்டுக்கொடுத்து அட்ஜஸ்ட் பண்ணிப் போயிடுங்க. கல் யாணமாகிட்டா அப்புறம் எல்லாம் சரி யாகிடும்'' என அட்வைஸ் செய்தார்.

சூர்யாவுக்கு தான் எங்கேயோ துவங்கி, வேறு ஏதோ ஒரு புள்ளியில் பயணிப்பதைப் போல இருந்தது. இனி இதிலிருந்து தப்பிக்க முடியாது. தேன்மொழிதான் தன் வாழ்க்கைத் துணை. ஆனால் சிறுவயதில் தன் மேல் அன்பு காட்டிய சேகரின் தாய்க்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்? குழப்பத் துடன் அருணாச்சலத்துடன் நடந்தான். கால்கள் அவரோடு நடந்தாலும் மனம் பின்னோக்கி அவசர அவசரமாக நாட்கள், மாதங்கள், வருடங்களைக் கடந்து சேகரின் தாழம்பேடு கிராமப்புழுதிக்குள் ஓடியது.




பத்தாம் வகுப்பு அரையாண்டுத் தேர்வை முன்னிட்டு, படிப்பதற்காக பள்ளி ஒதுக்கிய விடுமுறைக்காலம். சூர்யாவை யும் சேகரின் அம்மா அழைத்து வந்திருந்

தாள்; சூர்யா சின்சியராகப் படிப்பதைப் பார்த்தாவது சேகரும் படிப்பான் என்று.

அது ஒரு பேய்மழைக் காலம். மனசுக்குள் அந்தத் தென்னைமரங்கள் இப்பவும் பேயாட்டம் ஆடிக்கொண்டிருந்தன. மழை ஓய்ந்த சமயத்தில், ஏரியில் மீன்பிடிக்க கிராமத்துச் சிறுவர்கள் எல்லாம் ஏரிக்கு ஓடினார்கள். புத்தகங்களை மூடிவைத்து விட்டு சேகர் புறப்பட, சூர்யாவுக்கும் ஆசை துளிர் விட்டது. சேகரின் அம்மா எங்கோ வெளியில் போயிருந்த சமயம். இருவரும் புறப்பட்டனர். அங்கே ஏரிப்பகுதியில் ஊரே முழுக்க சூர்யாமேல் திரும்பியது. ''என்னடா அனாதைப் பயலே... போனாபோகுதுன்னு வீட்டுக்குக் கூட்டிவந்தா எங்க வீட்ல சாப்பிடற உனக்கு அவ்வளவு திமிரா? இரு இரு அம்மா அப்பா வரட்டும். உன்னை இன்னைக்கே சொல்லி மாட்டிவைக்கிறேன்'' எனக் கூற, உடனிருந்த சிறுவர்கள் அதற்கும் சிரிக்க, சூர்யாவுக்கு அவமானமாகப் போய் விட்டது. ''நானாடா வந்தேன்? நீதான் மக்கு... உனக்குத் தானா படிக்கத் தெரியாதேன்னுதான் அம்மா என்னை வரச்சொன்னாங்க'' எனக் கூற, உடன் இன்

**''என் சுயநலம் கருதியாவது, நான் தி.மு.க.விலிருந்து வெளியே வந்திருக்கக்கூடாது. வந்ததுதான் வந்தேன்; அரசியலை விட்டு விலகியிருக்க வேண்டும். ஈ.வெ.கி.சம்பத்துடன் சேர்ந்து தமிழ் தேசியக் கட்சியை ஆரம்பித்திருக்கக் கூடாது. ஆரம்பித்ததுதான் ஆரம்பித்தேன்; அதில் என் கைப்பணத்தை எல்லாம் செலவிட்டு ஏமாந்திருக்கக்கூடாது.**

**ஏமாந்ததுதான் ஏமாந்தேன்; அதிலிருந்து விலகி காங்கிரஸில் சேர்ந்திருக்கக் கூடாது. சேர்ந்ததுதான் சேர்ந்தேன்; தி.மு.க.வை வீழ்த்தி மீண்டும் காங்கிரஸை ஆட்சியில் அமர்த்திவிட முடியும் என்று நம்பி, இரவும், பகலும் அதற்காக உழைத்து, பிரசாரம் செய்து, என் காலத்தை வீணடித்திருக்கக்கூடாது.''**

**-'எனது வசந்த காலங்கள்' நூலில் கவியரசு கண்ணதாசன்**

**- ஏ.கே.நாசர், டி.ஆர்.பட்டினம்**

திரண்டு ஆணும் பெண்ணுமாக மீன் பிடியில் இருந்தனர். அந்தப் பகுதியே இரைச்சலாக இருந்தது.

தெருவின் இதரச் சிறுவர்களுடன் மீன் பிடித்துவிட்டு இருவரும் ஆளுக்கொரு பாட்டிலில் சிறுமீன்களைப் போட்டுக் கொண்டு வீடு திரும்பிக்கொண்டிருந்தனர். அவரவர் தாங்கள் பிடித்த மீன்களைக் காட்டிப் பெருமையுடன் பேசிக்கொண்டிருந்த சமயத்தில் சேகர் ஒருதலைப் பிரட்டையை வித்தியாசமாக நினைத்துப் பெருமையுடன் பேச, சூர்யாதான் முதலில் சிரித்து அது தலைப்பிரட்டை எனக் கூறினான். இப்போது மற்ற சிறுவர்களும் சேர்ந்துகொண்டு சேகரைக் கேலி செய்ய, சேகருக்கு ஆத்திரம் னொரு சிறுவன், ''ஓ... அப்படியா... டேய் சேகர் ஒரு மக்கு ப்ளாஸ்திரியாம்'' எனக் கூறிச் சிரிக்கத் துவங்கினான். சேகரால் இந்த அவமானத்தைத் தாங்கவே முடியவில்லை. உடனே, அங்கிருந்த ஒரு கல்லை எடுத்துக் கொண்டு சூர்யாவை அடிக்கப் போக, சூர்யா அவன் கையைப் பிடித்துத் தடுக்க, இருவரும் கட்டிப்பிடித்து உருளத் துவங்கினர். மீன்கள் தரையில் கொட்டித் தவித்தன. சிலர் அதைப் பொறுக்க, சிலர் இவர்களைப் பிரிக்க அந்த இடமே போர்க்களம் ஆனது. இருவரும் ஒருவர் சட்டையை இன்னொருவர் இறுக்கமாகப் பிடித்துக் கொண்டு கட்டி உருண்டனரே ஒழிய விட்டபாடில்லை. அதற்குள் ஒருவன் சேகரின்

வீட்டுக்கு ஓடினான்.

சேகரின் அப்பா இருவரையும் வீட்டில் வைத்து கோபத்தில் நாலு சாத்து சாத்தி விட்டார். அந்தச் சமயம் பார்த்து அங்கு சேகரின் சித்தப்பா வர, சேகர் ஓடிச் சென்று சித்தப்பாவின் கால்களைக் கட்டிக் கொண்டான். விஷயம் கேள்விப்பட்ட அவர், அண்ணனிடம், ''எவனோ ஒரு அனாதைப்பயலை வீட்ல கொண்டுவந்து உக்கார வைச்சுக்கிட்டு நம்ம பையனை அடிக்




கிற... எங்க அண்ணி... வரட்டும் இன்னைக்கு ரெண்டுல ஒண்ணு...'' எனக் கொதித்தவர், ''டேய் யார்றா நீ..?'' என சூர்யாவின் அருகில் வந்து அடிக்கப் பாய்ந்தார்.

''சரி...சரி...விடு முனுசாமி... அவ வரட்டும் பார்த்துக்கலாம்'' என்றார் சேகரின் அப்பா.

''தோ பார்... நீ வேணும்னா உன் பொண்டாட்டிக்குப் பயப்படு. அதுக்கு நான் ஆளு இல்ல... தெரியுதா? அனாதைப் பையனாச்சேன்னு போனாப் போகுதேன்னு பார்த்தா தலைக்கு மேலேல்ல ஏறுது... நாளைக்கே இது என் வீடு... நீ யாருடான்னு என்னைப் பார்த்தே கேட்டாலும் கேட்பான். டேய் நீ கௌம்பு... கௌம்பு... இப்பவே இவனை பஸ் ஏத்திவிட்டாத்தான் விளங்கும்'' எனக் கூறி அவசரமாக சூர்யாவின் புத்தகங்களை எடுத்து பையில் திணிக்கத் துவங்கினார். சேகரின் அப்பாவுக்கு என்ன செய்வதெனத் தெரியவில்லை.

''டேய் உன் ட்ரெஸ்ஸெல்லாம் மூட்டை கட்டிக்கிட்டு இன்னும் ரெண்டு நிமிஷத்துல கிளம்பு... 5.30 மணி பஸ் ஸ''க்கு ஏத்திவிட்டுர்றேன்.''

சூர்யாவுக்கும் இனி அங்கு இருக்க விருப்பமில்லை. சட்டெனு எழுந்துகொண்டான். தன் துணிமணிகளை எடுத்துப் பையில் வைக்கும்போதுதான் யாரென்றே தெரியாத தன் அம்மா அப்பாவின் ஞாபகம் அவனுக்கு வந்தது. கண்ணீர் மாலை மாலையாகக் கொட்டியது. துடைத்துக்கொண்டான்

சூர்யா புறப்படுவதைப் பார்த்தபின் சேகருக்கே குற்றவுணர்ச்சி தோன்றத் துவங்கியது. அப்பாவைப் பார்த்தான். அவருக்கும் அதே மனோநிலை. எல்லாவற்றுக்கும் மேலாக முத்துலட்சுமிக்கு சூர்யா மகனைப் போல. இது தெரிந்தால் என்ன நடக்குமோ என்ற பயம் அவருக்கு. எப்படியாவது கடைசியில் தம்பியைச் சமாளித்துவிடலாம் என நினைத்த அவருக்கு, சூர்யாவே விருட்டெனப் புறப்பட்டுக் கிளம்புவதைப் பார்த்த பின் என்ன செய்வதெனத் தெரியவில்லை.

முகத்தைக் கழுவிக்கொண்டு புத்தகம், உடைகள் உள்ளிட்ட தன் பேகை எடுத்துக் கொண்டு சூர்யா வெளியே வந்தான். சித்தப்பா துண்டை உதறிப் போட்டுக் கொண்டு அவன் பின்னால் வந்தார்.

சேகரும் அப்பாவும் வாசலுக்கு ஓடிவந்தனர்.

தொலைவில் யாரோ ஒரு பெண்மணியுடன் பேசிச் சிரித்தபடி முத்துலட்சுமி் வந்துகொண்டிருந்தாள்.

அம்மாவைப் பார்த்ததும் சேகரின் முகத்தில் மகிழ்ச்சி! ***(மீன்கள் துள்ளும்)***



சோ எழுதிய

# ஹிந்து மஹா சமுத்திரம்



வேதங்கள் தொடங்கி, உபநிஷத்துக்கள் வழியே வேதாந்த சிகரத்தில் ஏறி; சாத்திரம் கண்டு; புராணங்கள் வழங்கி, ஆலயங்கள் எழுப்பி; பக்தி வளர்த்து; சரித்திரம் எழுதி; நீதி பல வகுத்து; சட்டம் இயற்றி; சமூக சிந்தனையில் ஆழ்ந்து; விஞ்ஞானம்; கணிதம்; இலக்கியம்; வான சாத்திரத்தை அதன் கரையோரத்தில் நின்று பார்த்தவருக்கு ஏற்பட்ட பிரமிப்பை, மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்கிறார்.

**முதல் பாகம்** **ரூ.200.00**

யுகங்களின் காலக்கணக்கு, பெயர்க்காரணம், யாகங்கள், தெய்வங்கள், உருவங்கள், வாஹனங்கள், வேதங்கள், உபநிஷத்துக்கள், தத்துவங்கள், எமதர்மன் உபதேசங்கள், மரணத்திற்குப் பின், வருணனின் உபதேசம், நாரதர் பெற்ற உபதேசங்கள், ப்ரம்ம ஸூத்ரம் - போன்ற பல தகவல்கள்.

**இரண்டாம் பாகம்** **ரூ.250.00**

ஷடங்கங்கள், ஸ்ம்ருதிகள், தர்மம், சட்ட தத்துவங்கள், அர்த்தசாஸ்திரத்தில் கூறப்படும் அரசு நிர்வாகம், பிரம்ம புராணம், பத்ம புராணம், விஷ்ணு புராணம், சிவ புராணம், நாரத புராணம், மார்க்கண்டேய புராணம், அக்னி புராணம், பவிஷ்ய புராணம், பிரும்ம வைவர்த்த புராணம், லிங்க புராணம், வராஹ புராணம், ஸ்கந்த புராணம், மத்ஸ்ய புராணம், கருட புராணம், ப்ரும்மாண்ட வாயு புராணங்கள், ஸ்ரீமத் பாகவதம் - போன்றவை அடங்கியது.

**மூன்றாம் பாகம்** **ரூ.200.00**

ராமாயணம், மஹாபாரதம், ஸ்ரீமத் பகவத் கீதை, யோக வாஸிஷ்டம். போன்றவை அடங்கியது.

**நான்காம் பாகம்** **ரூ.150.00**

மூன்று ஆச்சார்யர்கள் (ஆதி சங்கரர், ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ மத்வாச்சாரியர்) வித்யாரண்யர், ஸ்ரீ வல்லபாச்சார்யர், ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் - ஆகியவர்களைப் பற்றியும் தெரிவிக்கிறது

**ஐந்தாம் பாகம்** **ரூ. 250.00**

அறுபத்து மூன்று நாயன்மார்கள், பன்னிரு ஆழ்வார்களைப் பற்றியது.

(அழகிய படங்களுடன், சிறந்த தாளில், நேர்த்தியான பைண்டிங் கொண்டது.)



அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
(ப.எண்) 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மைலாப்பூர், சென்னை-4
தொலைபேசி: 24641314 www.alliancebook.com
email: srinivasan@alliancebook.com

# எண்ணத்தின் பிரதிபலிப்பு... அலங்காரம்!

ருக்கந்தராஜ் நிறுவனத்தின் மூலம் இன்டீரியர் டெகரேஷன் நடத்தும் கோவை கே.சுரேஷ்குமாரிடம் அத்துறை குறித்தான சில சந்தேகங்களுக்கு விளக்கம் கேட்டோம். அதிலிருந்து...

**எம்.பி.ஏ. படித்த நீங்கள் இன்டீரியர் நிறுவனம் நடத்த என்ன காரணம்?**

''நான் ஒருவன் மட்டும் சம்பாதிக்காமல், நாலு பேரு சம்பாதிக்க வகை செய்யும் முதலாளியாக ஆசைப்பட்டேன். இப்போ என்னிடம் அறுபது பேர் வேலை செய்கிறார்கள். அதுதான் உண்மையான காரணம்.''

**வீட்டுக்கு இன்டீரியர் டெகரேஷன் அவசியமா?**

''வீட்டை அலங்கரிப்பது நமது எண்ணத்தின் பிரதிபலிப்பு. அலங்கரிப்பது இரண்டு வகை உண்டு உள்அலங்காரம் (இன்டீரியர்), வெளி அலங்காரம் (எக்ஸ்டீரியர்), இந்த இரண்டும் நாகரிகத்தின் வெளிப்பாடு. நாகரிகம் என்பது நமது புறருசியை (சமூகம் சார்ந்த) மட்டுமின்றி அகமன ரசனையையும் சேர்ந்தது. எனவே, நம்மை வெளிப்படுத்துவதற்கும் நம்மை நோக்கிப் பிறரை ஈர்ப்பதற்கும் இந்த அலங்காரம் பிரதானத் தேவை. இந்தத் தேவைதானே நமது வாழ்வுக்கும் வெற்றிக்



● கே.சுரேஷ்குமார்



● திருமதி சுரேஷ்குமா

கும் ஆதாரமான விஷயம்?

**இன்டீரியர் டெகரேஷன் செய்ய நினைப்பவர்களுக்கு உங்கள் ஐடியாக்கள் ப்ளீஸ்...**

''அனுபவ அலங்காரம் என்கிற உங்கள் திறமைகளை வெளிப்படுத்தும் ஓவியங்கள், புகைப்படங்கள், திரைச்சீலைகளையும் பயன்படுத்துங்கள். எங்களைப் போன்ற கஸ்டமைஸ்டு இன்டீரியர்களையும் ஆலோசியுங்கள். வீடு கட்ட பிளான் போட்டவுடன் இன்டீரியர் டெகரேஷனுக்கும் பிளான் பண்ணிவிட்டால் இடித்து மாற்றுவது போன்ற இடையூறு இல்லாமல் பட்ஜெட் கையைக் கடிக்காமல் பார்த்துக் கொள்ளலாம். குறைந்த இடத்தில் அதிகப் பொருட்கள் வைக்க வசதி இல்லை. கவலை வேண்டாம். பெட்ரூமில் கூட பொருட்களை ஸ்டோர் செய்ய முடியும். கட்டிலுக்கு அடியில் அறைகளை உருவாக்கலாம். குழந்தைகளுக்கு அடுக்கு கட்டில்கள் அமைக்கலாம்.

முதியோர்கள் வீட்டில் இருந்தால் அவர்களுக்கு ஏற்ற மாதிரி நடக்க, படுக்க... இவற்றுக்கு ஏற்றாற்போல கைப்பிடிகள், தரைகள், டாய்லெட் வசதிகளை மாற்ற வேண்டியிருக்கும். அவர்களையும் உள்ளடக்கியதுதானே நமது வாழ்க்கை?''

**எந்தெந்த விஷயத்தில் விசேஷ கவனம் வேண்டும்?**

''வண்ணங்களுக்கும் எண்ணங்களுக்கும் தொடர்பு உண்டு. அவற்றை ஏனோ தானோ என செலக்ட் செய்யக் கூடாது. சுற்றுச்சூழலுக்கும் மின்சார சிக்கனத்துக்கும் ஏற்ற L.E.d& CFL lampகளைத் தேர்வு செய்ய வேண்டும். பெயிண்ட்டுகளைத் தேர்வு செய்கையில் VOC (volatic Organic Compunds) எனப்படும் கெமிக்கல் அளவைக் கவனத்தில் கொள்ள வேண்டும். சிறப்பான தாவரச் சாறு கலவை கொண்ட பெயிண்ட்டும் இப்போது வந்துள்ளது.''

**குறைந்தபட்ச இன்டீரியர் டெகரேஷனுக்குச் செலவு?**

''25,000 லிருந்து துவங்கும்.''

**அது என்ன ருக்கந்தராஜ் என்ற பெயர்?**

''எனது வெற்றிக்கு என் முன்னோர்களின் ஆசி வேண்டும். எனவே அம்மா, அப்பா, பாட்டி இவர்களின் (ருக்குமணி, கந்தசாமி, ராஜம்மாள்) பெயர்ச் சுருக்கம் அது. நீங்களும் உங்க முன்னோர்களை நினைச்சு மனைவியின் துணையோடு ஆரம்பித்துப் பாருங்களேன். வெற்றி நிச்சயம்.''

**- ஆர்.பாலா**

**''வீடுகட்ட பிளான் போட்ட கையோடு இன்டீரியர் டெக்கரேஷனுக்கும் பிளான் போட்டா உங்க கையைக் கடிக்காது!''**

## ஜி.எஸ்.எஸ்





உலகிலேயே மிகவும் சிறிய நாடு வாடிகன்தான். நகரத்துக்குள் ஒரு நாடு இப்படியொரு விசித்திரமான பெருமை கொண்டது வாடிகன். இத்தாலியின் தலைநகர் ரோம். அதற்குள் இருக்கிறது வாடிகன்.

வாடிகனில் வருடக்கணக் காகத் தங்கினால் குடியுரிமை கிடைத்து விடுமா? இல்லை. போப்பின் அலுவலகத்தில் பணியாற்றுபவர்கள் மட்டும்தான் வாடிகனின் குடிமக்கள்.

ஏசுநாதர் தோன்றிய காலகட்டத்தில் ரோம் நாட்டு அரசியலும் (இப்போதைய ரோம் நகரம் மட்டுமல்ல - பரந்து விரிந்த ரோமானிய சாம்ராஜ்யம்) கிறிஸ்தவ மதமும் அதிகார பீடத்துக்குப் போட்டியிட்டன. வெற்றியும் தோல்வியும் போப், அரச பரம்பரை என இருதரப்பிலும் மாறி மாறி வந்தன.

ரோம் நாட்டின் முதல் போப் ஆண்டவர் என்பதால் தூய பீட்டருக்கு கத்தோலிக்க மதத்தில் சிறப்பிடம் உண்டு. தமக்குப் பிறகு மதத்தை ('சர்ச்'சை) வழி நடத்தும் பொறுப்பை ஏசுநாதர் அவரிடம்தான் ஒப்படைத்திருந்தார் என்பதால் மேலும் மதிப்பு. வாடிகன் குன்று என்றழைக்கப்பட்ட அந்த இடத்தில் பல கிறிஸ்தவர்களைக் கொன்று குவித்தான் ரோம் நாட்டு கொடுங்கோல் மன்னன் நீரோ. தூய பீட்டரும் இப்படிக் கொல்லப்பட்டார். அவர் இறந்த இடத்தில் ஒரு கல்லறையை எழுப்பினார்கள் அவரது சீடர்கள். நாளடைவில் சலவைக்கல், ரத்தினக்கற்கள் போன்றவற்றால் அந்தக் கல்லறை புதுப்பிக்கப்பட, அது மேலும் பிரபலமானது.

நாளடைவில் ரோம சாம்ராஜ்யம் என்பது மறைந்து இத்தாலி ஒரு நாடாக உருவானது.

ஒரு வழியாக மதமும் அரசியலும் கொஞ்சம் வேண்டாவெறுப்புடன்தான் கைகுலுக்கின. 1929ல் இத்தாலியின் சர்வாதிகாரி முசோலினிக்கும், ரோம் நகரைத் தன் பிடிக்குள் வைத்திருந்த போப் இரண்டாம் பியஸுக்கும் இடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி 'வாடிகன் நகரம் ஒரு தனி நாடு' என்பதை இத்தாலி ஏற்றுக்கொண்டது. 'இத்தாலியின் தலைநகரம் ரோம்' என்பதை போப் ஒப்புக்கொண்டார். ஆக இப்படித்தான் நகரத்துக்குள் நாடு உருவான அதிசயம் அரங்கேறியது.

மதம் என்பதையே ஒரு நோக்கமாகக் கொண்ட நாடு என்பதால் வேறுசில விநோதங்களையும் வாடிகனில் காண

# நகரத்துக்குள் நாடு

கூரையில் அவர் வரைந்த ஓவியங்கள் ஆகியன ஈடுஇணையற்றவை.

வழிவழியாக போப்பின் வாரிசுகள்தான் வாடிகனின் தலைமை ஏற்றுள்ளார்கள். தேர்ந் தெடுக்கப்பட்ட வாரிசுகள்தான். இந்தத் தலைமைப் பீடத்தை ஹோலி சி என்று அழைக்கிறார்கள். போப் பின் ஆலோ சகர்களை 'கார்டினல்கள்' என்று குறிப்பிடுவார்கள். வெவ்வேறு நாடுகளில் வசிக்கும் இந்தக்



லாம்.

ராணுவம் கிடையாது. பிற நாடுகளுடன் வணிகம் கிடை யாது.

பிற மதத்தவர்களும் நாத்திகர் களும் கூட வாடிகனை ரசிக்க முடியும். நகரெங்கும் கலை கொட்டிக்கிடக்கிறது. பிரபல ஓவியர் மைக்கேல் ஆஞ்சலோ வின் ஓவியத் திறமை விழிகளை விரிய வைக்கிறது. தூய பீட்ட ரின் பேராலயம் ஒரு கலைப் பொக்கிஷம். மைக்கேல் ஆஞ்சலோ தமது பெயரையும் பொறித்து வரைந்திருக்கும் ஒரே சிலையான ஃபியடா, இங்கே யுள்ள ஸிஸ்டீன் பேராலயத்தின்

கார்டினல்கள்தான் அடுத்தடுத்த போப்புக்களைத் தேர்ந்தெடுப்பார்கள். இந்தத் தேர்தல் முறையே சுவையானது. பூட்டிய அறைக்குள் கார்டினல்கள் கூட, அந்த அறையை வெளிப்புறமாகப் பூட்டி 'சீல்' வைத்து விடுவார்கள். ஒவ்வொரு கார்டினலும் தமது தேர்வை ஒரு தாளில் எழுதி அங்குள்ள தெய்வீக பீடத்தில் வைக்க வேண்டும். மூன்றில் இருபங்கும் அதற்கு அதிகப்படியாக ஒரு வோட்டும் பெறுபவரே வென்றவர். தேர்தல் முடிவு தெரிந்தவுடன் வாக்குச் சீட்டுகள் அங்குள்ள கணப்பில் போட்டுக் கொளுத் தப்படும். அடர்த்தியான வெள்ளைப் புகை கூண்டின் வழியாக வெளியேறுவதை வைத்து தேர்தல் முடிந்து விட்டது என்று வெளியிலிருந்து அறிந்து மக்கள்

# பல கட்டிடங்களைக் கொண்ட போப்பின் அலுவலக அறைகளின் எண்ணிக்கை ஆயிரத்துக்கும் மேல்!





ஆரவாரக் கூச்சலிட, பூட்டு திறக்கப்படும்! புதிய போப் மரபுப்படி வெள்ளை அங்கியில் வெளியில் வந்து, தமது முதல் வாழ்த்தினை உலகுக்குத் தெரிவிப் பார்.

**வா**டிகனுக்கு வெளிநாட்டுத் தூதர்கள் உண்டு. ஆனால் இவர்கள் ஒரு நாட்டின் பிரதிநிதி என்பதுபோல் இல்லாமல் கத்தோலிக்க தலைமையகத்தின் பிரதிநிதிகளாக மட்டுமே செயல்படுகிறார்கள்.

★ மிகச் சிறிய நாடுகள் பட்டியலில் இடம் - 1

மிகக் குறைவான மக்கள்தொகை கொண்ட நாடுகளில் இடம் - 13

★ ஒரு நாடு என்கிற முறையில் வாடிகன் ஐ.நா.சபையின் உறுப்பினர் இல்லை. (ஒரு சுப்ரீம் மத அமைப்பு வேறொரு அமைப்புக்கு கட்டுப்படுவதா!) ஆனாலும் நிரந்தரப் பார்வையாளர் என்ற அந்தஸ்து வாடிகனுக்கு உண்டு.

★ டான் ப்ரௌன் என்ற எழுத்தாளர் வாடிகனின் பெரும் அதிருப்தியைச் சம்பாதித்திருக்கிறார். 'டாவின்சி கோட்' 'ஏஞ்சல்ஸ் அண்ட் டெமன்ஸ்' போன்ற தமது நூல்களின் மூலம் ராயல்டியை எக்கச்சக்கமாகச் சம்பாதித்திருக்கிறார். ஏக திருமணமானவர். அவருக்குக் குழந்தை உண்டு என்பதிலிருந்து... வாடிகனின் ரகசியங்கள் மற்றும் பாதுகாப்புகள் வரை இவர் விரிவாக எழுதியது (திரைப்படங்களாகவும் வெளிவந்து) அதிர்வுகளை ஏற்படுத்தியது.

★ வாடிகனின் ஆதாரபூர்வமான மொத்த மக்கள் தொகையே ஆயிரத்துக்கும் குறைவு. அதே சமயம், பல கட்டிடங்களைக் கொண்ட போப்பின் அலுவலக அறைகளின் எண்ணிக்கை ஆயிரத்துக்கும் மேல்! அவற்றில் பணிபுரிபவர்களின் எண்ணிக்கை மூவாயிரம். ஸ்விஸ் காவலாளிகளின் எண்ணிக்கை நூறு.

★ பசுமை நிறைந்த நாடு. மூன்றில் ஒரு பங்கு தோட்டங்கள்.

★ அறுபதுக்கும் அதிகமான போப்மார்களின் உடல்கள் இங்கு புதைக்கப்பட்டுள்ளன.

★ போப்பின் கார் எண் SCV 1.

★ வாடிகனின் இரு அதிகாரபூர்வமான மொழிகள் இத்தாலியன், லத்தீன்.

★ இதுவரை மிக அதிகமான போப்களை அளித்த நாடு இத்தாலி. 20 போப்கள். இதனால்தான் தற்போதைய போப் (ஜெர்மானியர்) தேர்ந்தெடுக்கப் பட்டதால் வியப்பு பரவியது.

(அடுத்த வாரம்)

# இல்லாள்

கிருஹஸ்தாச்ரமத்தைத் தமிழில் இல்லறம் என்பார்கள். கிருஹம் என்றால் இல்லம்தான். "இல்லறமல்லது நல்லறமல்ல" என்று தர்ம சாஸ்திரங்களைப் போலவே தமிழ் ஆன்றோர்களும் இந்த ஆச்ரமத்தைத்தான் சிறப்பிக்கின்றனர்.

'க்ருஹம்' என்றால் வீடு. குருவின் வீட்டிலிருந்து திரும்பி வந்து சொந்த வீட்டில் தர்மங்களை நடத்துபவன் 'க்ருஹஸ்தன்'. 'க்ருஹ-ஸ்தன்' என்றால் நேர் அர்த்தம் 'வீட்டில் இருப்பவன்.' அதையே 'வீட்டுக்கு உடைமைக்காரன்' என்ற அர்த்தத்தில் எடுத்துக் கொண்டிருக்கிறோம். அவனை அகமுடையான், அகத்துக்காரன், வீட்டுக்காரன் என்றெல்லாம் வீட்டுக்கு முக்கியஸ்தனாக வைத்தே பத்தினியானவள் குறிப்பிடுகிறாள். பத்தினியைத் தவிர மற்றவர்கள் அவனை இப்படிச் சொல்லவில்லை. அந்த பத்தினியை 'க்ருஹிணி' என்றே சொல்கிறார்கள். 'க்ருஹஸ்தை' என்று சொல்வதில்லை. 'க்ருஹிணி' என்பதால் வீட்டிலே அவளுக்குத்தான் முக்கியத்துவம் அதிகம் எனத் தெரிகிறது. 'க்ருஹஸ்தை' என்றால் 'வீட்டிலே இருப்பவள்' என்று மட்டுமே ஆகும். ஆனால் 'க்ருஹிணி' என்கிறபோதோ வீடே இவளுடையதுதான். இவள்தான் வீட்டை நிர்வாகம் பண்ணுகிறவள் என்ற உயர்ந்த அர்த்தம் ஏற்படுகிறது. தமிழிலும் புருஷனை 'இல்லறத்தான்' - 'இல் அறத்தான்' - என்பதாக கிருஹத்தில் பண்ண வேண்டிய தர்ம காரியங்களைச் செய்ய வேண்டியவன் என்றே குறிப்பிட்டுவிட்டு, பத்தினியைத்தான் 'இல்லாள்' என்பதாக வீட்டுக்கே உடைமைக்காரி என்கிற மாதிரி சொல்லியிருக்கிறது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



# நீலிகோணாம்பாளையமும் நியூஜெர்ஸியும்

சென்ற வாரத் தொடர்ச்சி...



நட்சத்திர நெடுங்கதை - 1

''இதோ பார் சம்பூர்ணம்! அழுது புலம்பறதுக்கான நேரம் இது இல்லை. பொற்கொடி இப்ப இருக் கிற நிலைமையில் நாம என்னதான் புத்தி மதி சொன்னாலும் காதுல ஏறாது. அதே மாதிரி கோபத்தைக் காட்டினாலும் அது விபரீதத்துல போய் முடியும். இது முள்ளு மேல விழுந்த பூ மாதிரி. பூவையும் சேதம் இல்லாமே எடுக்கணும். முள்ளும் நம்ம கையைக் குத்தக் கூடாது.''

''இல்லீங்க. இந்த விஷயத்துல நாம எதுவுமே பண்ண முடியாது. பொற்கொடி என்ன பேச்சு பேசறா தெரியுங்களா? உங் களையே தூக்கி எறியற மாதிரி பேசறா! அப்பா என்ன சிங்கமா... புலியா... அவரைப் பார்த்துப் பயப்படறதுக்கு. நான் படிப்பை முடிச்சதும் எப்படியும் எனக்குக் கல்யாணம் பண்ணி வெக்கப் போறீங்க. நான் ஒருத் தரைக் கைகாட்டி இவரை எனக்குக் கல்யா ணம் பண்ணி வையுங்கன்னு சொன்னா அதுல என்ன தப்புன்னு கேட்கிறா!''

பொன்னுரங்கம் பெருமூச்சொன்றை விட்டபடி நாற்காலிக்குப் போய்ச் சாய்ந்தார்.

''அப்படி பேசினது நம்ம பொண் ணில்லை சம்பூர்ணம். அவ மனசுக்குள்ளே இருக்கிற காதல் என்கிற பிசாசு. அந்தப் பிசாசை நாம சாமர்த்தியமாத்தான் ஓட் டணும்.''

''எப்படிங்க ஓட்ட முடியும்? அவதான் அந்த அமெரிக்காக்காரனைக் கல்யாணம் பண்ணிக்கிறதுல பிடிவாதமாய் இருக் காளே?''

''அவ... அதே பிடிவாதத்தோட இருக் கட்டும். அவளோட காதலுக்கு எதிர்ப்பு காட்டக் காட்டத்தான் அதனோட வீர்யம் அதிகமாகும். அந்த வீர்யத்தைக் குறைக் கணும்னா ஒரே ஒரு வழிதான் இருக்கு.''

''என்ன வழி?''

''நீயும் நானும் நடிக்கணும்.''

''நடிக்கணுமா?''

''ம்... நடிக்கணும். அவ படிச்சுட்டு இந் தியா திரும்பற வரைக்கும் நீயும் நானும் அவளுடைய காதலை ஆதரிக்கிற மாதிரி நடிக்கணும். பொற்கொடி ஃபோன்ல பேசினா கோபப்படாதே. சிரிச்சுக்கிட்டே பேசு. நானும் அப்படியே பேசறேன். இந்தக் காலத்துல காதல் ஒரு தப்பான விஷயம் கிடையாது. உன்னோட எதிர்கால வாழ்வை நிர்ணயம் செய்துகொள்ள உனக்கு மட் டுமே உரிமையிருக்கு. உனக்கு அந்த அமெரிக்க இளைஞன்தான் கணவராய் வரணும் என்கிற விருப்பம் இருந்தா, அந்த விருப்பத்துக்குக் குறுக்கே நானோ அம் மாவோ நிற்க மாட்டோம்னு நானும் சொல்லிடறேன்.''

சம்பூர்ணம் தன் கணவரை ஒரு பயப் பார்வை பார்த்தாள்.

''என்னங்க இது! போற போக்கைப் பார்த்தா

ராஜேஷ்குமார்

நீங்களே அவளுக்கு அந்த அமெரிக்க மாப்பிள்ளையை முடிச்சு வெச்சுடுவீங்க போலிருக்கு.''

''பொற்கொடி தலை கீழா நின்னாலும் அது நடக்காது. அவ பிடிவாதமாய் இருக்கும்போது நாமும் பிடிவாதமாய் இருந்தா அவ என்ன பண்ணுவா தெரியுமா?''

''என்ன பண்ணுவா...?''

''அமெரிக்காவிலேயே கல்யாணத்தைப் பண்ணிக்கிட்டு வந்து நம்ம ரெண்டு பேர் காலிலேயும் விழுந்து ஆசீர்வாதம் கேட்பா. இப்ப இருக்கிற நிலைமையில் அவ போக்குல போகவிட்டுத்தான் நம்ம வழிக்குத் திருப்பணும்.''

''நம்மால முடியுமா?''

''ஏன் முடியாது?''

''அய்யோ... அவ பேசற பேச்சை நீங்க கேட்டிருந்தீங்கன்னா இப்படியெல்லாம் பேச மாட்டீங்க.''

''இதோ பார் சம்பூர்ணம்! நான் சொன்ன படி நீ நடி போதும். அவ ஊர் திரும்பட்டும். மத்ததையெல்லாம் நான் பார்த்துக்கிறேன்.''

''நீங்க இவ்வளவு சொல்றீங்க. எனக்கு என்னவோ துளிகூட நம்பிக்கை வரலைங்க'' சம்பூர்ணம் விட்ட பெருமூச்சில் அந்த அறையே வெப்பமானது.

பேசிக்கொண்டு இருக்கும்போதே டெலிஃபோன் ஒலித்தது. சம்பூர்ணம் பொருமினாள்.

''அந்தக் கடன்காரியாய்த்தான் இருப்பா! நீங்களே எடுத்து என்ன பேசணுமோ பேசுங்க.''

பொன்னுரங்கம் போய் ரிஸீவரை எடுத்தார். மறு முனையில் பொற்கொடி தான்.

''அப்பா...!''

பொன்னுரங்கம் சில விநாடிகள் மௌனமாய் இருந்தார். பொற்கொடியே தொடர்ந்து பேசினாள்.

''அப்பா..! அம்மா உங்ககிட்டே எல்லாத்தையும் சொல்லிட்டாங்கன்னு நினைக்கிறேன். அதான் பேசாமே கோபத்தைக் காட்டறீங்க.''

''கோபம் இல்லேம்மா, வருத்தம்! மத்தவங்க வீட்ல இந்தக் காதல் விவகாரம் வந்தப்ப வேடிக்கை பார்த்துட்டு இருந்தேன். இப்ப நம்ம வீட்டுக்கே வரும்போதுதான் வேதனை தெரியுது. நீ இப்படி பண்ணுவேன்னு நான் கொஞ்சம்கூட நினைக்கப் பார்க்கலைம்மா.''

''ஸாரிப்பா! ஃப்ரெட்ரிக் ரொம்பவும் நல்லவர். அவர் எனக்குக் கணவராய் வந்தா நான் ரொம்பவும் சந்தோஷப்படுவேன்.''

''அப்போ... நீ உன்னோட சந்தோஷத்தை மட்

## நோய்

வாய்ப்பட்டிருந்த இளம் நண்பர் ஒருவரை அலெக்சாண்டர் காணச் சென்றார். அறைக்குள் நுழையும்போது, அந்த அறையிலிருநந்து அழகிய இளம் பெண் ஒருத்தி வெளிவந்து, அலெக்சாண்டரைக் கடந்து சென்றாள்.

உள்ளே சென்ற அலெக்சாண்டரிடம் நண்பர், "என்னுடைய நோய் போய்விட்டது நண்பா!" என்றார்.

"ஆமாம்! நான்கூட அது வெளியே போனதை உள்ளே நுழையும்போது பார்த்தேன்!" என்றார் அலெக்சாண்டர்.

-ஏ.கே.என்



டும்தான் பார்த்து இருக்கே?''

''எனக்கு வேற வழி தெரியலப்பா...''

''அப்படீன்னா அந்த ஃப்ரெட்ரிக்கைத் தான் கல்யாணம் பண்ணிக்கப் போறே?''

''உங்க சம்மதத்தோட...''

''எங்க சம்மதம் கிடைக்கலைன்னா?''

''வெயிட் பண்ணிட்டிருப்பேன். ஃப்ரெட்ரிக்கும் அதையேதான் சொல்லிட்டிருக்கார். உங்க பேரண்ட்ஸ் சம்மதம் கிடைச்சாத் தான் நம்ம கல்யாணம்னு தீர்மானமாய்ச் சொல்லிட்டார்.''

''இதோ பாரம்மா... நீ தெரிஞ்சோ தெரியாமலோ ஒருத்தனை விரும்பிட்டே. அவனைத்தான் கல்யாணம் பண்ணிக்குவேன்னு பிடிவாதமா சொல்றே... இனிமே நாங்க என்ன சொன்னாலும் நீ கேக்கப் போறது இல்லை. உன்னோட காதல் விவகாரத்தை எங்களாலே ஜீரணம் பண்ணிக்க முடியலை. அதை ஜீரணம் பண்ணிக்க எப்படியும் கொஞ்ச நாளாகும். அதுவரைக்கும் பொறுமையாய் இருக்கணும். இருக்க முடியுமா?''

''இருக்கேன்ப்பா...! இன்னும் மூணு மாசத்துல என்னோட படிப்பு முடிஞ்சு இந்தியாவுக்கு வந்துடுவேன். அந்த நேரத்துல உங்க முடிவைச் சொன்னாக்கூட போதும். நீங்களும், அம்மாவும் ஓ.கே சொல்லாமே எனக்குக் கல்யாணம் கிடையாது.''

''இதுல நீ உறுதியாய் இருப்பியாம்மா?''

''கண்டிப்பா...''

''சரிம்மா...! இனிமே ஃபோன்ல பேசும்போது உன்னோட காதல் விவகாரத்தைப் பேச வேண்டாம். வழக்கம்போல அம்மாகிட்டேயும் என்கிட்டேயும் என்ன பேசுவியோ அதை மட்டும் பேசு... எது நடக்கணும்னு இருக்கோ... அது நல்ல படியாவே நடக்கும்.''

''அப்பா! என் மேல உங்களுக்கு எந்தக் கோபமும் இல்லையே?''

''அடிக்கடி உண்ணாவிரதம் இருந்து... நினைச்சதைச் சாதிச்சிட்டாரு... நம்ம தலைவரு...''

''என்ன சாதிச்சிட்டாரு...?''

''தன்னோட உடல் எடையைக் குறைக்கணும்னு நினைச்சதைத் தான்...''

- திருத்துறைப்பூண்டி சேகர்



''உன் மேல எனக்கு எந்தக் கோபமும் கிடையாதும்மா!'' சொல்லிட்டு ரிஸீவரை வைத்த கணவரை ஒரு அனல் பார்வை பார்த்தாள் சம்பூர்ணம்.

''ஏன் கோபம் இல்லேன்னு பொய் சொல்றீங்க? வயித்தைப் பத்திக்கிட்டு எரியுதுன்னு சொல்ல வேண்டியதுதானே...?''

''சம்பூர்ணம்! அப்படியெல்லாம் பேசினால் காரியம் கெட்டுடும். அவளோட காதலுக்கு ஆதரவாய் இருக்கிற மாதிரி நடிச்சுக்கிட்டேதான் நம்ம திட்டத்தைச் செயல்படுத்தணும். ஒரு மூணு மாசம் பொறு! அவ ஊர் வந்து சேரட்டும். அதுக்கப்புறம் என்னோட கோபத்தைக் காட்டறேன். நீ போய் டிஃபனை எடுத்து வை. எனக்குப் பசிக்குது'' சொல்லிவிட்டு கை, கால் கழுவ புழக்கடைப் பக்கம் போனார் பொன்னுரங்கம்.

மூன்று மாதங்கள் கரைந்து போயிருக்க, பொற்கொடி படிப்பை முடித்து

விட்டு அன்றைக்குத்தான் நியூஜெர்ஸியிலிருந்து திரும்பியிருந்தாள். நீலிகோணாம்பாளையத்தில் இருந்த ஒட்டுமொத்த சொந்த ஜனமும் அவளை வேடிக்கை பார்த்துவிட்டுப் போனதும், சாயந்தரம் பொன்னுரங்கம் ஓய்வாய் இருந்தபோது சம்பூர்ணம் உள்ளே வந்தாள்.

''என்னங்க...!''

''ம்...''

''பொற்கொடி இப்ப ரூம்ல இருக்கா... போய்ப் பேசுங்க.''

''அவளோடு வேற யாரும் இல்லையே?''

''இல்லை...''

''சரி... அந்தப் பத்திரிகையை எடு...!''

''பத்திரிகையை இப்பவே அவகிட்டே காட்டப் போறீங்களா?''

''இப்ப காட்டாமே... வேற எப்ப காட்டறது...?''

''பத்திரிகையைப் பார்த்ததும் அவ பத்ரகாளி ஆயிடுவாளே?''

''இதோ பார் சம்பூர்ணம். அவ இப்போ இருக்கிறது... நீலிகோணாம்பாளையத்தில். நியூஜெர்ஸியில் இல்ல... இங்கே நான் வெச்சதுதான் சட்டம். உன்னோட அண்ணன் மகன் சக்திவேலுக்கும் பொற்கொடிக்கும் கல்யாணம் நிச்சயம் பண்ணி பத்திரிகையை அடிச்சாச்சு. வர்ற இருபத்து மூணாம் தேதி ராமலிங்க செளடேஸ்வரி அம்மன் கோயில்ல வெச்சு கல்யாணம். முதல் பத்திரிகையே பொற்கொடிக்குத்தான். அவ பத்ரகாளியாய் மாறினான்னு வைய்யி... நான் நரசிம்ம அவதாரம் எடுத்துடுவேன். வா... நீயும் வா!-ரெண்டு பேரும் போய்ப் பத்திரிகையைக் கொடுக்கலாம்.''

சம்பூர்ணம் பயத்தோடு எச்சில் விழுங்கிக்கொண்டு பின் வாங்கினாள். ''அய்யோ... நான் வரலைங்க... ஒரே நேரத்துல ஏற்படற பூகம்பத்தையும் சுனாமியையும் தாங்கிக்க என்னால முடியாது.''

''உனக்குத்தான் பயம்... எனக்கென்ன பயம்?'' பத்திரிகையோடு கிளம்பினார் பொன்னுரங்கம்.

வீட்டின் பின்புறக் கூடத்தையொட்டிய அறையில் உட்கார்ந்து லேப்-டாப்பில் எதையோ பார்த்துக்கொண்டிருந்த பொற்கொடி நிமிர்ந்தாள். மலர்ந்தாள். உரத்த குரலில் சொன்னாள். ''வாங்கப்பா...! ஃப்ரெட்ரிக் ஃபோட்டோவைக் காட்டறேன்.''




**பி**ரபல மோட்டார் கார் தயாரிப்பாளர் ஹென்றி ஃபோர்டின் 50-வது ஆண்டு திருமண விழாவில், ''உங்களது திருமண வாழ்க்கையின் வெற்றிக்குக் காரணம் என்ன?'' என்று நண்பர்கள் கேட்டனர். அவர் சொன்னார்: ''கார் வியாபாரத்தைப் போல ஒரே மாடலைப் பின்பற்றுகிறேன்!''

**- ஏ.கே.நாசர்**

பொன்னுரங்கம் குரலைத் தாழ்த்தினார்.

''பொற்கொடி! உன்னோட அம்மா பயந்துக்கிட்டு முன்னறையில் உட்கார்ந்துட்டா. இந்தா பத்திரிகை! உன்னோட அருமை அத்தை மகன் சக்திவேலுக்கும் உனக்கும் நடக்கப் போகிற கல்யாணத்துக்கான பத்திரிகை. இப்ப... உனக்கு சந்தோஷம் தானே?''

பொற்கொடியின் கண்களில் நீர் பளபளத்தது. பத்திரிகையை வாங்கிப் பார்த்துவிட்டு பொன்னுரங்கத்தின் கால்களில் விழுந்தாள்.

''இப்படியொரு பத்திரிகையை கையால் வாங்கறதுக்காக நான் எப்படியெல்லாம் நடிக்க வேண்டியதாயிடுச்சு... பார்த்தீங்களா? கற்பனையில் ஒரு ஃப்ரெட்ரிக்கை உருவாக்கி அவனை உருகி உருகிக் காதலிச்சு...''

பொன்னுரங்கம் மகளின் தோள்மேல் கையை வைத்தார். ''நீ அப்படி காதலிக்காமே இருந்திருந்தா உன்னோட அம்மா சக்திவேலை விட்டுட்டு ஒரு பணக்கார வெளிநாட்டு மாப்பிள்ளையைத் தேடிப் போயிருப்பா...''

''அம்மாவோட குணம் இப்படி மாறிப் போனது உண்மையிலேயே எனக்குப் பெரிய ஆச்சர்யம்தான்ப்பா...!''

''பொற்கொடி! சக்திவேல் பெரிய படிப்பு படிச்சு, நல்ல வேலையில் இருந்தாலும் உனக்கு இன்னமும் பெரிய இடத்திலிருந்து மாப்பிள்ளையைக் கொண்டு வரணும்னு நினைச்சுட்டா உன் அம்மா. என்கிட்டேயும் சொல்லி அடம் பிடிச்சா. சக்திவேல்தான் நம்ம பொண்ணுக்குச் சரியான, பொருத்தமான மாப்பிள்ளைன்னு நான் சொன்னது அவ கிட்டே எடுபடலை. அவளை வழிக்குக் கொண்டு வர என்ன பண்றதுன்னு நான் திணறிட்டு இருந்தப்பத்தான், நீயும் உன்னோட ஃப்ரண்ட் புனிதாவும் சேர்ந்து ஒரு யோசனை சொன்னீங்க. அந்த யோசனைப்படி உன் கற்பனையில் உருவான ஃப்ரெட்ரிக்கைக் காதலிக்கிற மாதிரி நடிச்சு அதிர்ச்சி வைத்தியம் கொடுத்தே. நீ கொடுத்த அதிர்ச்சி வைத்தியம்தான் உன்னோட அம்மாவை, பெரிய இடத்து மாப்பிள்ளை வேணும் என்கிற நோயிலிருந்து குணப்படுத்தியிருக்கு. குடும்ப மானம் காப்பாற்றப்படணுமே என்கிறதுக்காக உடனடியாய் தன்னோட அண்ணன் மகனுக்கே உன்னைக் கட்டி வைக்கிற முடிவுக்கு வந்தா. நானும் அந்த வாய்ப்பை உபயோகப்படுத்தி பத்திரிகையை பிரிண்ட் பண்ற வரைக்கும் போயிட்டேன்!''

பொற்கொடி அறையினின்றும் எட்டிப் பார்த்துவிட்டு சொன்னாள். ''அப்பா! அம்மா வர்ற மாதிரி இருக்கு.''

''அப்படியா! அப்படீன்னா இன்னும் ஒரு ரெண்டு நிமிஷத்துக்கு அவளை பயமுறுத்திட்டு அதுக்கப்புறமாய் உண்மையைச் சொல்லிடுவோம்.''

''ஆரம்பிக்கட்டுமா?''

''ம்... ஆரம்பி....''




பொற்கொடி செயற்கையாய் ஒரு கோபத்தை வரவழைத்துக்கொண்டு, கத்த ஆரம்பித்தாள்.

''அப்பா! உங்க மனசுல நீங்க என்ன நினைச்சுட்டு இருக்கீங்க? காதல்னா உங்க வீட்டுத் தோட்டத்துல விளையற கத்திரிக்காய்ன்னு நினைச்சீங்களா? யாரைக் கேட்டு பத்திரிகையை பிரிண்ட் பண்ணீங்க? ஐ...லவ் ஃப்ரெட்ரிக். கல்யாணம் பண்ணிக்கிட்டா அவரைத்தான் பண்ணிக்குவேன்!'' ○

எல்லா சாலைகளும் ரோமை நோக்கிச் செல்கின்றன என்றொரு வாசகம் உண்டு. அதுபோல எல்லாப் பாதைகளும் வீட்டை நோக்கியே வருகின்றன. உலகிலே மிகப் பிடித்த இடங்கள் என்ன என்றால் ஒரு பட்டியலே தரலாம் ஒவ்வொருவரும்! ஆனால் நம் ஒவ்வொருவருக்குமான உலகமாய் இருப்பது வீடுதான். அந்தக் குட்டி உலகத்துக்குள்ளேயும் கதகதப்பைத் தேடி அடங்கும் இடம் எது என சில வி.ஐ.பிக்களைக் கேட்டோம்.



**பா. விஜய் (திரைப்படப் பாடலாசிரியர்):**

''எனது பாட்டுக்கள் பல உதயமாவது என்னோட அறையில்தான். அந்த அறை எனக்கே எனக்காகவென்று என் தந்தை வடிவமைத்துக் கொடுத்தது. அந்த ஒரு அறையில் உட்காரும் பொழுது மட்டும் கவிதைகள் தானாகவே வந்து என் மனத்திலிருந்து என் பேனாவின் வழி காகிதத்தில் விழுவது மாதிரி நான் உணர்கிறேன். சுற்றி இருக்கும் பல நூல்கள் கூட அப்படி கவி மழை எழுத என்னைத் தூண்டுவதைப் போல நினைப்பேன்.''



**வி.பிரபாகர் (திரைப்படக் கதாசிரியர் மற்றும் வசனகர்த்தா):**

''இதுவரை நான் எழுதிய திரைக்கதைகளும் சரி, வசனங்களும் சரி அவை எல்லாமே உருப்பெற்றது எனது பிரத்யேகமான படிக்கும் அறையில்தான். தென் கிழக்கு திக்கை நோக்கி அமைந்திருக்கும் எனது படிக்கும் அறையில் கிட்டத்தட்ட 500, 600 புத்தகங்கள் வைத்திருப்பேன். நான் வணங்கும் தெய்வங்களான ஸ்ரீ ராகவேந்திரர் மற்றும் ஷிர்டி சாய் பாபா அவர்களின் படங்களும் அந்த அறையில் இருக்கும்.''



சிக்கில் குருசரண் (கர்னாடக இசை பாடகர்):

"என்னோட கம்ப்யூட்டர் அறைதான் நான் அதிக நேரம் இசையோடு இசைந்து இருக்கும் அறை. எங்கெல்லாம் பாட்டு இருக்கோ அங்கெல்லாம் நான் இருப்பேன்னு என் அம்மா அடிக்கடி சொல்லுவார். வீட்ல எந்த இடத்துல இருந்தாலும் நான் பாடிக்கொண்டே இருப்பேன் என்றாலும், தீவிரமான பாட்டு பயிற்சி, அதாவது எலக்ட்ரானிக் ஸ்ருதி பெட்டியின் நாதமும், கம்ப்யூட்டர் ஃபைலிலிருந்து ஒலிக்கும் அந்த சுகமான தம்பூரா இசையும் ஒரு சேர, நான் என்னோடு என் இசையோடு மட்டுமே இணைந்து இருப்பது என் கம்ப்யூட்டர் அறையில்தான்."

# அப்பா செதுக்கிய அறை!

அனுராதா ரமணன் (எழுத்தாளர்):

"என்னோட ஆஃபீஸ் அறையில்தான் நான் எழுதுவேன். கிட்டத்தட்ட முப்பது வருடங்களாக அதே நாற்காலியும், அதே மேஜையும்தான் என்னோடு என் எழுத்துக்களோடு இதே அறையில் இருக்கின்றன. அந்த நாற்காலியைத் திருப்பித் திருப்பிச் சரிசெய்து விட்டு அதையேதான் பயன்படுத்தி வருகிறேன். இன்றளவும் கம்ப்யூட்டரைத் தாங்கிக் கொண்டு அது இங்கேயேதான் ஜம்மென்று நின்று கொண்டிருக்கிறது. பல சமயங்களில் இந்த அறை போர்க்களம் போல காட்சி அளிக்கும் பேப்பர்களம். ஏகப்பட்ட பேப்பர்கள், புத்தகங்கள் மலையாகக் குவிந்து கிடக்க அதற்கு நடுவே சற்றும் மலைக்காமல் சளைக்காமல் நான் எழுதி வருவேன்."

தொகுப்பு: **நளினி சம்பத்குமார்**



"கஷ்டம்னா என்னன்னு என் பையனுக்குத் தெரியாது!"

"இனிமேல் தெரிஞ்சுக்குவார் அத்தை!"

- கவிதா முருகேந்திரன்





"தலைவரே! நீங்க அரசியல்ல இருக்கறது நிறைய பேருக்குத் தெரியல."

"என்னய்யா சொல்றே?"

"இன்னும் உங்க படம் போலீஸ் ஸ்டேஷன்ல இருக்கு!"

- அம்பை தேவா

"அனு என்கிட்ட 'ஐ லவ் யூ'ன்னு சொல்லிட்டு... இப்ப இன்னொருத்தனை காதலிக்கறாடா... அதுக்கென்ன அர்த்தம்?"

"அவ உன்கிட்ட சொன்னது 'பொய் லவ் யூ'ன்னு அர்த்தம்?"

- ராசை உ.குணசீலபாண்டியன்



"தலைவர் இன்னிக்கு கறுப்பு தினம்னு அறிவிச்சிருக்காரே... ஏன்?"

"தலைக்கு டை அடிக்கப் போறார்னு அர்த்தம்!"

- அம்பை தேவா



"காணாமல் போன கணவர் பற்றி நீங்க ஏன் புகார் பண்ணலை?"

"தொலையட்டும்னு விட்டுட்டேன்!"

- தேவா



"என்னது? அவர் ஒரு 'சீரியல் கில்லர்'ரா? அப்படி எத்தனை கொலை பண்ணினார்?"

"கொலை பண்ணலே! டி.வி சீரியல் எடுக்கறார்!"

- சம்பத் குமார்



* இருக்க ஒரு இடம்... சாப்பிட கொஞ்சம் சோ

நிரந்தர வீடின்றி, நாடோடிகளாய் நகரும் வாழ்வுக்கு வாழ்க்கைப்பட்டவர்களைச் சந்தித்தோம். 'வீடு' குறித்தான எண்ணத்தைக் கொஞ்சம் கலைத்துப் போட்ட அவர்களின் உரையாடலிலிருந்து...

''இருக்க ஒரு இடம், படுக்க ஒரு பாய், சாப்பிட ஒரு தட்டு அதில் கொஞ்சம் சோறு இது கிடைச்சா போதாதா..? அது தானே வீடு?'' என்று கேட்கிறார்கள் அந்த சர்க்கஸ் கலைஞர்கள்.

வருடத்தில் இரண்டு மாதங்கள் பெரிய பெரிய நகரங்களில் சர்க்கஸ் போடுவதிலும், மற்றைய நாட்களில் குறைந்தது 40 நாட்கள் வீதம் கிராமங்களிலும், சின்னச் சின்ன நகரங்களிலும் தங்கள் சர்க்கஸ் வாழ்க்கையை நடத்திச் செல்லும் இவர்கள், ஓய்வு எடுக்கவும், சாப்பிடவும் மட்டுமே தங்களது கூடாரங்களுக்குள் நுழைகிறார்கள். சுமார் 250 பேர் கொண்ட குழுவினராக சர்க்கஸ் வித்தை காட்ட ஊர் ஊராகச் செல்லும் இவர்களுக்காக இவர்களே கூடாரங்களை சர்க்கஸ் நடக்கும் இடத்தை ஒட்டி அமைத்துக் கொள்கிறார்கள். இதில் சமைப்பதற்கென்று தனியாக மூன்று மெஸ்கள் இருக்கின்றன..

# ...அதுதான்

* வேடியம்மா

''யாதும் ஊரே யாவரும் கேளிர்! எல்லா ஊரும் நம்ம ஊருதான், எல்லா வீடும் நம்ம வீடுதான். எங்களுக்கு இப்படி ரெண்டு மாசத்துக்கு ஒரு தடவை வேற வேற இடங்கல்ல சர்க்கஸ் கூடாரங்கள் கிடைச்சுக்கிட்டே இருக்கும் அவ்வளவுதான்'' என வாழ்க்



* ஒரு கூரையும் தரையும்தான் வீடு...

கையை ஈஸியாக எடுத்து கொண்டு ஜாலியாகப் பேசுகிறார்கள் இவர்கள்.

''இந்தக் கைகளால ஏகப்பட்ட வீடுகள் கட்ட உதவி செஞ்சிருக்கோம். இதோ இப்படித்தான் போற எடமெல்லாம் எங்களுக்

# நல்ல வூடு!

குன்னு சின்னதா ஒரு குடிசையோ, கூடாரமோ போட்டுக்குவோம். ரோட்டோரம் அப்பால சில சமயம் கட்டிக்குவோம், சில சமயம் கட்டுற வீடுகள் கிட்டயே போட்டுக்குவோம். எங்களுக்குன்னு ஒரு வீடுங்கற தம்மாத்தூண்டு ஆசையும் போயே போச்சு... எங்க கூடாரம்லாம் போட சும்மா ஒருநாள் ரெண்டு நாள்தான் பிடிக்கும். ஒரு தபா கட்டியாச்சுன்னா நாங்க பாட்டுக்கு இந்த குட்சக் குள்ளயேதான் கிடப்போம்'' என்கிறார் வேடியம்மா.

''எங்க புள்ளைங்க ரெண்டு பேரும் ஊர்லயேதான் இஸ்கூல்ல படிக்கறாங்கோ...'' என்கிறார் வேடியம்மாவின் கணவர் கன்னியப்பன். நாங்க இப்படி கல்லைத் தூக்கி, மண்ணைத் தூக்கி நாலு வீடாவது கட்டி முடிச்சாத்தான் எங்க வூட்ல அதாங்க திருவண்ணாமலைல இருக்குற எங்க வீட்டாண்ட அடுப்பு எரியும். இந்தக் குடிசைக்குள்ள ஏதோ வெளிச்சம் காட்ட ஒரு லைட், அடுப்பு சில பாத்திரம் பண்டம் அவ்ளோதான்... பண்டிகை சமயம் வந்துச் சுன்னா எங்க வீட்டைப் பாக்க ஓடிருவோம் திருவண்ணாமலைக்கு. இதோ பொங்கலுக்குக் கூட புள்ளைங்களப் பாக்க ஊருக்குப் போனோம். ஒரு கூரை ஒரு தரை இவ்வளவுதாங்க எங்க வாழ்க்கையே. நாம கட்டற எல்லா வூடும் நமக்குச் சொந்த வூடு மாதிரிதான்னு நெனைச்சுக்குவோம். வூடுன்னா டீவி, பிரிட்ஜ், ஸ்கூட்டர் எல்லாம் இருக்கறது இல்லீங்கோ, குடும்பம் மொத்தமும் ஒட்டுக்கா சந்தோஷமா இருக்குறாங்க பார்த்தீங்களா அதுதான் நல்ல வூடு...'' என்கிறார் கன்னியப்பன்.



* கன்னியப்பன்

செய்தி, சித்திரங்கள்:
**நளினி சம்பத்குமார்**

''நான் இரண்டு வயதிலிருந்து வரைய ஆரம்பிச்சேன். முறையா ஓவியம் படிக்கல. எம்.பி.ஏ. படிச்சுட்டு அஸிஸ்டென்ட் மானேஜரா எக்ஸ்போர்ட் கம்பெனியில் பதினைஞ்சு வருடம் வேலை செஞ்சேன். பிறகு வேலையை விட்டுட்டு முழு நேர ஓவியரா மாறிட்டேன். கலை தரும் ஆத்ம திருப்தி அபூர்வமானது. திட்டமிடல் இன்றி வரைய ஆரம்பிப்பேன். என் மனமே தூரிகையாய் மாறி தீட்ட ஆரம்பித்துவிடும். கொல்லாமை எனது கொள்கை. மனசாட்சிக்கு விரோதமாகச் செயல்படாமல் இருப்பது என் லைஃப் ஸ்டைல்! படத்திலிருக்கும் குதிரை என் மனத்தின் குறியீடு. என் ஓவியங்கள் உலக அமைதிக்கும் எனது ஆத்ம தேடலுக்கும் துணை புரியும் என்பதே திடமான நம்பிக்கை'' என்கிறார் கோவையைச் சேர்ந்த ஓவியர் ஏ.பி. ராம்பிரகாஷ். இவர் எழுத்தாளர் ராஜேஷ் குமாரின் மருமகனும் கூட!





- செய்தி சித்திரம் :
**அமிர்தா**

அசத்துது
பட்டைவ, சுடிதார்,
டி-சர்ட் பிரிண்டிங்

# குடும்பத்துடன் சுய

## வீட்டில் வைத்தே துணிகள



நெல்லையைப் பிறப்பிடமாகக் கொண்ட ஆர். பரத
டெக்ஸ்டைல் பிரிண்டிங் யூனிட் நடத்தி வருகிறார். இ
எக்ஸ்போர்ட் நிறுவனங்களுக்கும் பேப்ரிக் பிரிண்டிங் வே
பிரிண்டிங் தொழில் நடத்தி வரும் 'அர்ச்சனா அகாடமி' எ
வகுப்புகள் நடத்தி வருகிறார். சமீபத்தில் இவரின் பயி
தலைமையில் நடந்தது. ஆயிரத்துக்கும் மேற்பட்டோர் இப்
இன்று இந்தியாவிலும் உலகில் பல நாடுகளிலும் இவரிடம் ப
மேக்கிங், கிரீட்டிங் கார்டு மேக்கிங், பேப்பர் பேக் மேக்கிங் ே
கல்வித்தகுதியோ தேவையில்லை. சென்னையில் உள்ள
பெறுகின்றனர். தான் கற்ற கலையையும், தன் 20 வருட
பயிற்சிகளை நடத்தி வருகிறார். தமிழ்நாட்டில் ஜனவரி மா
நடைபெற உள்ளன. இப்பயிற்சியில் சேர விருப்பமுடையவர்
முன்பதிவு செய்யவும் கீழ்கண்ட முகவரியில் நேரில் தொடர்பு

**துணிகளின் பிரிண்டிங் பற்றிய சிறப்பு நிகழ்ச்சிகளை தொலை**
**9.00மணிக்கும் மக்கள் தொலைக்காட்சியில் அனைத்து சனி கிழ**
**1.30 மணிக்கும், இமயம் டிவியில் வியாழன், வெள்ளி மதியம்**











திருமதி. தேவி பரதராஜா அவர்கள் பட்டுப்புடவையில் கோல்டு பிரிண்டிங் செய்து மாணவிகளுக்கு பயிற்சியளிக்கும் காட்சி

★பால
சுந்த
994
★கடு
வெங்
2241
ஹரி
2218
989
செல
999
234
மார்
சரோ
048
994
ஸ்டே
அகா

# நாழில் செய்யலாம் வாங்க!

## ஷின் இல்லாமல் சுயமாக பிரிண்டிங் செய்யலாம்!

னையில் பிரிண்டிங் டெக்னாலஜி படித்து 20 ஆண்டுகளாக பல முன்னனி ஜவுளி நிறுவனங்கள் மற்றும் கார்மெண்ட் ய்து வருகிறார். கேரளாவில் திருவனந்தபுரத்தில் டெக்ஸ்டைல் டர் ஆர்.பரதராஜா சென்னையிலும் கிளையை துவக்கி பயிற்சி வர் கோட்டத்தில் பத்மஸ்ரீ கவிப்பேரரசு வைரமுத்து அவர்கள் கற்று சுயமாக தொழில் செய்து வருவது குறிப்பிடத்தக்கது. டெக்ஸ்டைல் பிரிண்டிங் செராமிக் பிரிண்டிங், வெட்டிங் கார்டு ழிலை செய்து வருகின்றனர். இப்பயிற்சிக்கு வயது வரம்போ அகாடமியில் பலர் ஆர்வத்துடன் தினமும் வந்து பயிற்சி தையும் பிறரும் கற்று பயன் பெற வேண்டும் என்று நேரடி ரி, மார்ச் மாதங்களில் 2 நாட்கள் நேரடி பயிற்சி வகுப்புகள் மற்றும் கட்டணம் பற்றிய விவரங்கள் அறியவும், பெயர்களை ம்.

காணத்தவறாதீர்கள். விஜய் டிவியில் எல்லா புதன் கிழமை காலை 10.30மணிக்கும். வின் டி.வியில் அனைத்து சனி கிழமையும் மதியம் டி.வியில் (மலையாளம்) புதன் கிழமை மதியம் 2.00 மணிக்கும் த்திகையில் ஜனவரி 18 முதல் திங்கள் மதியம் 1.30 மணிக்கும் மை காலை 11.30க்கும் தொடர்ந்து ஒளிபரப்பு செய்யப்படுகிறது.

*கும் அறியுங்கள் – ஆடைகளில் அச்சுக்கலை*

ஜயா எம்போரியம் : 2338271, 2224226, 9786694268 *வேலூர் - கிராப்ட்ஸ் : 2217040, 9894111147 *காஞ்சிபுரம் - குட்டி பேன்சி : திருவண்ணாமலை - பன்னீர் கோல்டு கவரிங் : 251540, 9443280540 ஏஜென்சி : 9367612390, 9344185338 *விழுப்புரம் - ஸ்ரீ ஸ்டோர்ஸ் : 223553, 9443223553 *சிதம்பரம் - விஜயா ஸ்டோர்ஸ் : 12664 *நெய்வேலி - நீலகிரி பட்டன் ஹவுஸ் : 9600660274 *சேலம் - 266955, 9362101997 *ஈரோடு - ஸ்ரீ கிருஷ்ணா ஸ்டோர்ஸ் : 2214628, 5219151 *கோயம்புத்தூர் - லதா ஸ்டோர்ஸ் : 9894880634, *திருச்சி - ரேணுகா பேன்சி மார்ட் : 2716114, 4011431 *தஞ்சாவூர் - 37, 9944702007 *திண்டுக்கல் - கே.பி.எஸ். ஸ்டோர்ஸ் : 2433038, *தேனி - ஸ்ரீ காளீஸ்வரி கிப்ட் & கிராப்ட் : 9865936032, 9976635684 *மதுரை - ஷா மோகன்லால் காந்திலால் : மார்கெட்டிங் : 93344108371, 99894384966, பாப்புலர் ஏஜென்சி : 2343045, 9443143045 *விருதுநகர் - டோர் : 9865731871, 9487421239 *இராஜபாளையம் - சுமங்கலி பேன்சி ஸ்டோர்ஸ் : 9865662034 *சிவகாசி - ஸ் : 2276276, 9443124276 *பாலக்காடு - ஜே.எம். கம்பெனி 0995283662 *எர்ணாகுளம் - ஜோஸ் & கம்பெனி 3 *கொல்லம் - பிரைஸ்லெஸ் ஸ்டேஷனரி : 0474-2750846 *தூத்துக்குடி - விஜி பேன்சி : 9245779447, சென்னை - ராஜா திரட் ஹவுஸ், ரெங்கநாதன் தெரு : 24333850, 9865686162 *நாகர்கோவில் - நர்மதாஸ் பேன்சி 55, 9976688177 *திருநெல்வேலி - சுகின் புக் சென்டர் : 2578899, 94439 33333 *திருவனந்தபுரம் - அர்ச்சனா 472131, 2477131, 9745604131, 9846864131

Conducted by:

**அர்ச்சனா**
அகாடமி
*TEXTILE PRINTING INSTITUTION*

Since1989

#New.10, Old.26, ஜக்கிரியா காலனி மெயின் ரோடு, கோடம்பாக்கம் மேம்பாலம் அருகில், சூளைமேடு, சென்னை – 94. PH: 044 - 42134131, 9500088131, 9677054131, 9600050131, 9500080131

e-mail: archanahacademy@gmail.com / www. archanahacademy.com



“ஹலோ... வணக்கம் கல்கி.”

“கல்கியில் காலேஜ் ஜாலி விசிட் பக்கங்கள் போடாம இருக்கறது தப்பா?”

“பெரிய தப்பு ஒண்ணும் இல்லை.”

“ஸ்ரீ சக்தி கைலாஷ் பெண்கள் கல்லூரிக்கு விசிட் செஞ்சு கலர்ஃபுல் பக்கங்கள் கலக்கலா பண்ணுங்கன்னு கூப்பிட்டா வராம இருக்கறது தப்புதானே..?”

“தப்பு மாதிரிதான் தெரியுது.”

“தப்புதான்னு சொல்லிட்டு இன்னும் பேசிக்கிட்டு மட்டுமே இருக்கறது?”

“பெரிய தப்புதான். இதோ வந்துட்டோம்” என்றபடி ஸ்டாப்-பிளாக்கில் கல்கி ஆஃபீஸில் மறைந்து, சேலத்திலிருந்து அழைத்த அந்த காலேஜில் தோன்றினோம். பூக்கள் அணிவகுத்து நின்று, வெல்கம் கல்கி என்று பொக்கே கொடுத்தது

# பொக்கே தந்த பூக்கள்!




காலேஜ்ல கிருஷ்ணன், கோபியர் எல்லாமே நாங்கதான்!



நீங்க ட்ரை பண்ணாதீங்க... நான் ஜிம்னாஸ்டிக் பேபி!







நட்பு

நாம் சோர்ந்து விழும்போது
தாங்கிப் பிடிக்கும்
மூன்றாவது கை

- கே.மாலதி





வெட்கம்

என் கண்ணீருக்கு எத்தனை
வெட்கம் பாரேன்...
நீ பிரியும்பொழுதுதான்
வெளிப்படுகின்றது.

- வி. ஷாம்லி

காதலியிடம்
தொடர்ந்து பேசியதில்
தாயின் மரணச் செய்தி
மிஸ்டு காலாகிப் போனது

- எம். புவனேஸ்வரி





நீ இன்றி நானில்லை என்றது
காதல்!
எதுவும் இன்றி
நான் இருப்பேன் என்றது நட்பு!

- எம். சரண்யா

# தொலைக்காட்சித் தொடர்கள் நன்மையா... தீமையா...?

+

படைப்புகள் யாவும் அழகானவைதான். நம் பார்வையில்தான் அழகும் அசிங்கமும் இருக்கு. இயந்திர உலகில் மனிதன் தன்னைத் தானே உணர்ந்துகொள்ள தொலைக்காட்சித் தொடர்கள் வாய்ப்பளிக்கின்றன. மனிதர்களால் மட்டுமே அதை ரசிக்க முடியும்.

–

தொலைக்காட்சித் தொடர்கள் நஞ்சாகிப் போன அமிர்தம். குடும்ப வாழ்வில் தொல்லைக்காட்சியாக இருக்கின்றன தொடர்களின் காட்சிகள். அவர்களின் அராஜகம் தேன் பூசிய காப்பு.

பூக்களின் அணிவகுப்பு!

ஃபோன் போட்டுக் கூப்பிடற அளவுக்கு என்ன செஞ்சிட்டோம்னு நினைக்காதீங்க... எங்க பெருமையை நாங்களே சொல்லக்கூடாது. இருந்தாலும் சொல்றோம்.

சப்ஜெக்ட்டிலிருந்து ஸ்போர்ட்ஸ், கல்ச்சுரல்ஸ்னு நாங்க கால் வைக்காத ஏரியாவே கிடையாது. கப் வாங்காத ஏரியாவும் கிடையாது. கட்டம் கட்டிக் கலக்குவோமில்ல...



ஹார்ட்வேர் - சாஃப்ட்வேர்ன்னா என்ன தெரியுமா?

ஹார்ட்வேர் - மரத்தோட வேர்

சாஃப்ட்வேர் - செடியோட வேர்

- பிரியங்கா

காதலிக்கிற பொண்ணைக் காதலின்னு சொல்லலாம். கல்யாணம் பண்ற பொண்ணைக் கல்யாணின்னு சொல்ல முடியுமா?

(உன்னோட மொக்க மெசேஜைக் கேட்டு அவனவன் ஓடியே போயிடப் போறானுங்க. போதும் போ... தாயே!) - பிரவீணா









கல்லூரியின் புகழ் பரப்பும் வெற்றிமங்கைகள் பார்வதி, பவ்யா.

எக்ஸாமுக்கு முன் ஒரு வாரம் - மயக்கமா... கலக்கமா... மனதிலே குழப்பமா?

எக்ஸாம் காலத்தில் - ஊரு சனம் தூங்கிடுச்சு...

எக்ஸாமின்போது - எங்கே செல்லும் இந்தப் பாதை?

ரிசல்ட்டுக்குப் பின் - ஊர்வசி... ஊர்வசி டேக் இட் ஈஸி பாலிஸி!

- எஸ். மோகனராணி, மூன்றாமாண்டு, சி.ஏ



வெற்றிக் கண்மணிகளை விதை தூவி வளர்ப்பவர்கள்!



* கே.செந்தில்குமார், கல்லூரி - தாளாளர்

''மாணவிகளின் எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு பயனுடைய 13 இளங்கலைப் பாடத் திட்டங்களையும், 6 முதுகலைப் பாடத் திட்டங்களையும் எமது கல்லூரியில் நடைமுறைப்படுத்தியுள்ளோம்.

மாணவிகளின் சேவை மனப்பான்மையை வெளிக்கொணரும் வகையில் 'சிறுதுளி' என்ற அமைப்பு நிறுவப்பட்டுள்ளது. மாணவிகள் தாங்களே முன்வந்து கொடுக்கும் நிதியினைக் கொண்டு அவர்கள் மூலமாகவே ஆதரவற்றோர் இல்லம், குழந்தைகள் காப்பகம், முதியோர் இல்லம் போன்றவற்றுக்கு போற்றத்தக்க உதவிகளைச் செய்து வருவது அவ்வமைப்பின் சிறப்பு.



* கைலாசம்

பெண்களின் முன்னேற்றத்துக்கென்று சேலம் மாநகரில் முதன் முதலாகப் பெண்கள் சுயநிதிக் கல்லூரி தொடங்கப்பட்டது.

''பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்''

- என்ற பாரதியின் எண்ணங்களை ஊக்குவிக்கும் வகையில் இக்கல்லூரி செயல்படுகிறது.

ஒரு பெண் கல்வி கற்றால் அவளுக்கு மட்டுமல்லாது, குடும்பத்தையும் நாட்டையுமே வழிநடத்திச் செல்லப் பயன்படுகின்றது. அத்தகைய கல்வியைத் தருவதே இந்நிறுவனத்தின் நோக்கமாகும்.

- கைலாசம், கல்லூரி தலைவர்

# சிறுதுளியும் ஸ்ரீசக்தி கைலாஷும்...



* கே.ராஜ விநாயகம், கல்லூரி செயலாளர்

மாணவிகள் விளக்கின் திரி போன்றவர்கள். அவர்களைச் சிறிது தூண்டி விட்டால் போதும். அவர்களின் வாழ்க்கை பிரகாசமாக ஒளிரும். மாணவிகளிடம் உள்ள தனித் திறமைகளை ஏதேனும் ஒரு வகையில் வெளிக்கொணர வேண்டுமென்பதே எங்கள் நோக்கம். இதற்காக எங்கள் கல்லூரியில் ஒவ்வொரு கல்வியாண்டிலும் துறைவாரியாக தேசிய மற்றும் மாநில அளவிலான கருத்தரங்கங்கள் நடத்தப்படுகின்றன.



* கே.சுஜாதா மாலினி கல்லூரி முதல்வர்

அனைத்துத் துறைகளிலும் தேசிய அளவிலான கருத்தரங்கங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. எமது மாணவிகள் விளையாட்டுகளில் கபடி, கைப்பந்து, கொக்கோ, கராத்தே, ஜிம்னாஸ்டிக் போன்ற போட்டிகளில் தேசிய அளவிலும் கால்பந்து, தடகளப் போட்டிகளில் மாநில அளவிலும் கலந்துகொண்டு பரிசுகளை வென்று கல்லூரிக்குப் பெருமை சேர்த்துள்ளனர். நூற்றுக்கும் மேற்பட்ட விரிவுரையாளர்கள் மாணவிகளுக்கு வழிகாட்டியாக இருந்து வழி நடத்துகின்றனர்.

செய்தி சித்திரம்:
ஆர்.பாலா

# கனாக் காணும் குயில்!

'கனாக் காண்கிறேன் கனாக் காண்கிறேன் கண்ணாளனே' பாடலின் மூலம் தமிழ்நாட்டு இளசுகளைச் சுண்டி இழுத்த குலோப்ஜாமுன் குரல்! அதற்குச் சொந்தக்காரர் பின்னணிப் பாடகி வினிதா.

''பச்சை கொட்டி கிடக்கும் மலப்புரம் மாவட்டத்தில் பாரதப்புழா ஆறு பாயும் குட்டிபுரம் கண்டெடுத்த தேவதை நான். இந்த ஊரின் மற்றொரு சிறப்பு, நவீன இலக்கியங்களை நுட்பமாய் வடித்த எம்.டி.வாசுதேவன் நாயர் பிறந்த ஊர். பத்தாம் வகுப்பு வரை குட்டிபுரம் ஜெம்மாஸ் ஸ்கூலில் படித்தேன். இசை என்பது என் பாட்டி வழி வந்த உறவு. பத்தாம் வகுப்பு முடிந்து பாலக்காடு வட்டம் கொழிச்சாம்பாடி அருகிலுள்ள சித்தூர் காலேஜில் சேர்ந்தேன். எக்னாமிக்ஸ் சப்ஜெக்ட்டில், இணையாக மியூசிக் இருந்தது. அப்போ கேரளாவில் இரண்டே இரண்டு இடங்களில்தான். ஒன்று திருவனந்தபுரம், இன்னொன்று சித்தூர். காலேஜ் டேஸ்ல நடக்கும் எல்லா ஃபங்ஷனுக்கும் என் பாட்டு இல்லாமல் இருக்காது. பாடகி வினிதான்னாதான் தெரியும்'' என்று சுயபுராணம் பாடும் இவர், இளையராஜாவின் ஆசிர்வாதமே தம்மை வழி நடத்துவதாகக் கூறுகிறார்.

''தெரிந்த ஒருவரின் மூலமாக ராஜா சாரைச் சந்தித்தேன். இரண்டு பாடல்களை அவரிடம் பாடிக் காண்பித்தேன். 'நல்லாயிருக்கு. தொடர்ந்து முயற்சி செய்' என்று பாராட்டியவர், 'சந்தர்ப்பம் அமையும்போது கூப்பிடுவேன்' என்றார்.''

வினிதா, பல பாடல்களைப் பாடியிருந்தாலும் கனாக் காண்கிறேன் கனாக் காண்கிறேன் கண்ணாளனே பாட்டு மூலம் பட்டி தொட்டிவரை 'ரீச்' ஆகிவிட்டார். இப்போ மலையாளம், தமிழ், தெலுங்கு, கன்னடம் என சுமார் ஐம்பது பாடல்களுக்கு மேலே கமிட் ஆகியிருக்கிறாராம்.

சமீபத்தில் வெளியான வேட்டைக்காரன் படத்தில் வரும் 'நா அடிச்சா தங்க மாட்ட நாலு மாசம் தூங்க மாட்ட' பாடலைப் பாடியது இவரது மகன் அர்ஷத்!

செய்தி, படம்: **அ.ராஜ்குமார்**

# வீட்டின் ஆன்மா

**வெ**ளியே ஊரே அடங்கியாச்சு. அம்மணி மட்டும் பாப்பு தூங்கலைன்னு தொட்டில் ஆட்டிக்கிட்டு இருக்கிறாள். இன்னும் கணேசன் வரல. அம்மணி முகத்துல தூக்கக் கலக்கம். தொட்டில ஆட்டுற கை மட்டும் எதேச்சையா இயங்குற மாதிரி இருக்கு.

பர்வதம் இருந்த வரைக்கும் இப்படி என்னை அநாதரவா விட்டதில்லை. வெள்ளிக்கிழமைன்னா மஞ்சள் தெளிச்சு வாசல்ல பெரிசா இழைக் கோலம்லாம் போடுவா. நீள நீளமா செதுக்கிப் பிழிஞ்ச கைமுறுக்கா இழையும் கோலம். சாத்தான் குளத்துலேருந்து வர்ற ராசுமாமா, 'பாம்பு நெளிஞ்சாப்ல இருக்கு நம்ம பர்வதம் கோலம் போட்டா'ன்னு சொல்லுவார்.

அவர் கூட எப்பயாச்சும் அவர் பொண்ணு ரம்யா வரும். ரம்யா சும்மா மொட்டு மொட்டு கண்ணோட பார்க்க அழகாத்தானிருக்கும். அதுக்குக் கல்யாணம் கூட இங்கதான் பேசினாங்க. கணேசனோட ஃப்ரண்டுதான்னு சொல்லிப் பேசி முடிச்சாங்க. கல்யாணத்துக்கு முன்னால கணேசனே அந்தப் பையனை வேணாம்னு சொல்லிட்டான்.

அப்ப எல்லாருக்கும் கணேசனுக்கு ரம்யாவைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைன்னு எண்ணம் வந்துச்சு. ராசு மாமா

கூட ஒரு பக்கமா தலையைச் சாய்ச்சுக்கிட்டு நிலைப்படில நின்னுக்கிட்டு.. 'ஏன்டாப்பா கணேசா இப்படி கல்லைத் தூக்கி போடுற'ன்னு கேட்டார்.

## தமயந்தி

'வேணாம். ரம்யா நல்லதுக்குத்தான் சொல்றேன்'னுட்டு கணேசன் காலை விரசலா விரிச்சு நிலையைத் தாண்டப் போனான்.

'உனக்கு மனசுல வேற ஆசைல்லாம் இருக்கதால இப்படி சொல்றியா?'னு மாமா கேட்டார் அவனோட தோளைத் தொட்டு. அவனோட தோள் ஒருமுறை புல்லரிச்சுப் போச்சு.

'அப்படினா நான் நிச்சயதார்த்தம் முன்னாடியே சொல்லிருப்பேன். அப்புறம் உங்க இஷ்டம்...'

நிலையைக் கடந்து போனான். ராசு மாமாவுக்குக் கோபம் வந்து கையிலிருந்த செம்பைத் தூக்கி எறிஞ்சதுல நிலைப்படி ஓரத்துல இருக்கு பாருங்க நெளிசல்... அது அப்ப ஏற்பட்டதுதான். சரியா தெரியலையா... இருங்க. கணேசன் இப்ப வந்திருவான். அப்ப ஒருசாய்த்து கதவு திறக்கிறப்ப வெளிச்சம் வரும், அப்ப பாத்துக்கோங்க.

அப்புறமா அடுத்த நாள்தான் ஒரு பெண் தயக்கமா வந்து கணேசனைப் பாக்கணும்னு சொல்லிச்சு. அந்தப் பொண்ணை நேரா ரம்யாகிட்ட பேசக் கூட்டிட்டுப் போனான். அவங்க ரெண்டு பேரும் பேசிட்டு வந்தப்ப அந்தப் பொண்ணு கையை ரம்யா பிடிச்சிருந்தா.

'அப்பா.. கணேசன் சொல்றது என் நல்லதுக்குத்தான். கல்யாணத்தை நிறுத்திடுங்க'னு சொன்னா.

அவனோட அப்பா நடராஜனுக்கு எப்பவுமே மாப்பிள்ளை மவுசு குறைஞ்சதில்ல. முதல் வாரிசா காலேஜுக்குப் போய் படிச்ச பையன்னு அவங்க அப்பா கொடுத்த செல்லம். அப்ப பணம் செழிப்பா இருந்த காலம். கைசொடுக்கினா பொண்ணுங்க கடைக்கண் பார்வை கிடைச்சது. கொடைக்கு ஊர் போன பொண்டாட்டி சீக்கிரம் வருவானு நினைக்காம உலகு கூட வீட்டுல அதோ அந்த மூக்கு அறைல இருக்கிறதைப் பாத்துப் புட்டா கணேசன் அம்மா.

பாட்டப்பத்து பாட்டி மடியில படுத்து அம்மா அழுதது கணேசனுக்கு இன்னும் மனசில இருக்கலாம். நடராஜன் செத்து இந்த முற்றத்துல வைச்சிருந்தப்ப கூட அவ கண்ணுலருந்து வந்த கண்ணீர்ல வன்மம் கலந்திருந்தாப்புலதானிருந்துச்சு.

அப்பப்ப என்னையும் புதுசாக்குவாங்க. பொங்கலுக்கு ஒரு வாட்டி அம்மா கம்மலை அடகு வைச்சுக் கூட வெள்ளையடிச்சான் கணேசன். எப்ப தொழில் நலிஞ்சதோ அப்பவே எல்லாம் போச்சு. இடையில அம்மணியைக் கல்யாணம் பண்ணிக்கிட்டான்.

மூலக்கல் வச்ச காலத்துலருந்தே இந்த வீட்டுல வாழ வந்த எந்தப் பொண்ணும் அழாம இருந்ததில்ல. அம்மணியோட கதையும் வேற எப்படி இருக்க முடியும்? கணேசனுக்கு தலை சீவ எண்ணெயிலிருந்து சாப்பாடு வரைக்கும் வைச்சுக் கொடுத்திட்டு பழையதை எடுத்து வைச்சு சாப்பிடணும். இல்லைன்னா.. இம்புட்டு பழயது இருக்கு.. சுடுசோறு கேக்குதானு அம்மாக்காரி கத்துவா. அம்மணி நல்லா சமைக்கும். அது கைப் பக்கு



வம் அப்படி. என்னைச் சுத்தியே வாசமா இருக்கும்னா பாருங்களேன். ஆனா சூடா எதையும் சாப்பிட முடியாது. வாயில ருசி பாக்குற நேரம் அம்மணி ஆசையா கரண்டியை உசத்திப் பிடிச்சு சொட்டு சொட்டா குழம்பு விட்டுக்கறதைப் பார்க்கறப்ப, தலைவாழை இலை போட்டு அவளை சுடுசோறு சாப்பிட வைக்கணும்னு தோணும்.

ஒரு நாள் அம்மணி குழம்பு வைக்கிறப்ப அம்மாக்காரி வாசல்ல நின்னுக்கிட்டு 'எல்லா குழம்பையும் ஒரே சட்டில போட்டு வைக்கக் கூடாது. ஆட்டுக்கறிக்குத் தனி சட்டி வையி'ன்னு சொன்னா. ஆனா கூட தினம் அம்மணி எந்தச் சட்டில குழம்பு வைக்குதுனு சட்டியை மோந்து மோந்து



பார்ப்பா. அவ பாக்கறது அம்மணிக்கு அவ சின்னப் புள்ளைல வளர்த்த ஜிம்மி ஞாபகம் வந்துருச்சு போல. அது செத்து முருங்கைக்கன்னுக்குக் கீழ புதைச்சது ஞாபகம். மறுஜென்மம் நாய்க்கும் உண்டானு யோசிச்சதுல கொல்லுனு சிரிச்சுத் தொலைச்சிட்டா அம்மணி.

அவ்ளோதான். கையில வைச்சிருந்த பாத்திரத்தை அவ மேல வீசி எறிஞ்சா அம்மாக்காரி. அது என் மேல விழுந்து டபாடபானு ஓடி சுவர்ல முட்டி நின்னுச்சு. அப்புறமாதான் அம்மணி அவ்வளவு நாள் மவுனத்தையெல்லாம் கண்ணாடி வைச்சுக் கிழிக்கிற மாதிரி சத்தம் போட்டா. அம்மாக்காரியும் கோவத்துல மீதி இருந்த பாத்திரத்தையும் அம்மணி மேல எறிஞ்சா. சுவர் பூராவும் கெட்ட வார்த்தையா வந்து ஒட்டிக்கிச்சு.

ராத்திரி கணேசன் வர்ற வரைக்கும் ரெண்டு பேருமே பாத்திரத்தையெல்லாம் எடுத்து வைக்கவே இல்ல. அவன் வரவும், ''நானே வாய்ல மண்ணை அள்ளிப் போட்டுட்டு ஓரமா இருக்கேன். என்னைப் போய் என்னல்லாம் சொல்லுதா''னு அழுதா.

''நானே கடங்காரன்கிட்ட மல்லுக்கட்டிட்டு வர்றேன். ஏன் உசிர எடுக்கீக?''ன்

''என்கிட்ட வாங்கின கடனை எப்ப திருப்பித் தரப் போறே?''

''நானும் பார்க்காத ஜோசியம் இல்லப்பா. எப்ப திருப்பித் தருவேன்னு ஒரு ஜோசியக்காரனாலயும் கணிச்சுச் சொல்ல முடியலை!''

-சாயம்.வெ.ராஜாராமன்

னுட்டு அவன் பங்குக்கு அம்மணியைப் போட்டு அடிச்சான்.

அம்மணி குப்புறப் படுத்தமாதிரியே அழுதுட்டு கிடந்தா. காலைல எந்திரிச்சவளுக்கு கணேசன் காப்பி போட்டுக் கொடுத்தான். அவ அப்பதான் குமுறிக் குமுறி அழுதா. ''அம்மாவ அண்ணன் வீட்டுக்குப் போகச் சொல்றேன்..''னான்.

''கடன் வாங்கியிருக்கீகளா?''னு பதிலுக்குக் கேட்டா அம்மணி. அவன் அமைதியா இருந்தான்.

''தலைக்கு மேல போயிட்டு... வீட்டை வித்துறலாம்னு இருக்கேன்''னான். எனக்குத் தலை சுத்துற மாதிரி இருந்துச்சு.

ராத்திரி ஒரு ஏழு மணி வாக்குல

யாரையோ என்னைப் பார்க்கக் கூட்டிட்டு வந்தான். அந்தாளு ஆயிரம் கேள்வி கேட்டான். அம்மாக்காரி ''ஐயோஓ.. விக்கப் போறியா.. இதைப் பாக்க அந்தப் பாவி மனுசன் இல்லியே''னு ஒப்பாரி வச்சா.

''ஆமா... உலகு பெரிம்மையோட அப்பா இருந்தத பாட்டப்பத்து ஆச்சிட்ட அழுத கதையெல்லாம் பாத்துட்டானா''னு கணேசன் திருப்பிக் கேக்க அமைதியா புலம்ப ஆரம்பிச்சா. இந்த மூதி வந்த வேளைதான்னு நங்குநங்குனு அவ தலையைப் பார்த்துப் பார்த்து சுவர்ல அடிச்சிக்கிட்டா. எனக்குத்தான் அம்மணமா நிக்கிற மாதிரி இருந்துச்சு.

இந்த அம்மாக்காரிக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்? அவ வாக்கப்பட்டு வந்த மாதிரிதான் நடராஜனோட அப்பன் என்னைப் பார்த்துப் பார்த்துக் கட்டினார். கல்யாணத்தைக் கட்டு... வீட்டைக் கட்டுனுதானே சொல்லுவாங்க... அப்படினா நானும் இந்தக் குடும்பத்துக்கு வாக்கப்பட்டு வந்தவதானே!

''கல்யாணத்தைக் கட்டு... வீட்டைக் கட்டுனுதானே சொல்வாங்க... அப்படினா நானும் இந்தக் குடும்பத்துக்கு வாக்கப்பட்டு வந்தவதானே!''

எனக்குனு மனசுலாம் இருக்குனு தெரியாதைக்கு என் உடம்பை மட்டும் புதுசாக்கி விட்டுடுறாங்க. நேத்து வந்த புரோக்கர்கூட 'வீட்டுக்கு வெள்ளைலாம் அடிச்சு விட்டுருவீங்கல்லே'னு கேட்டான். கணேசன் ஒரு நிமிஷம் யோசிச்சு ''அட்வான்ஸ் வந்தோன்ன முடிச்சுத் தாரேன்''னான். எல்லார்ட்டயும் கேக்கியே... எங்கிட்ட கேக்கப்படாதா... நானும் உங்க கூடயே இருக்கேன்ப்பானு சொல்ல நெஞ்சு கிடந்து துடிக்குது.

பக்கத்து வீட்டை ஒரு நாலு அஞ்சு வருஷத்துக்கு முன்னால இடிச்சுத் தள்ளி ஃப்ளாட்ஸ்னு கட்டிப்புட்டாங்க. அந்த மாதிரி நினைக்கிறவன் கையில சிக்கினா சாவுதான். வறட்சியா மனசுக்குள்ள ஒரு வெப்பம் தோணுது. யார்கிட்டயும் பகிர்ந்துக்காம மனசுக்குள்ளயே வைச்சு வைச்சு சுத்திமுத்தி நம்மை மையப்படுத்தி பிரச்னையும் முடிவும் எடுக்கப்படுது. கொடையில பலி கொடுக்கப்படுற ஆடு மாடு கோழி மாதிரி. ஏன் சில இடங்கள்ல பொம்பளைங்க மாதிரி.

அம்மணி கதவைத் திறக்குறா. எங்கவலைல கணேசன் கதவைத் தட்டினது கூட காதுல விழுலன்னு நினைக்கேன். கதவு திறக்கிறப்ப சட்டுனு கூர்மையா பாருங்க. ராசு மாமா செம்பு எரிஞ்சு வளைஞ்ச நிலை தெரியும். ஆங்.. அந்த இடம்தான். பார்வதம் கோலம் போடுற முற்றம் இதுதான். அவ மஞ்சக் காமாலை வந்து செத்தப்ப இந்த அம்மாக்காரி குளிப்பாட்டி எடுத்தது இந்த கோடி வாசல்தான். அம்மணி குழந்தை பெத்து வந்தப்ப ஓங்கிச் சாத்தின வாசக் கதவு இதுதான்.

பட்... கதவைப் பூட்டி விட்டா அம்மணி. ''சாப்பிடுறீங்களா.. என்னாச்சு?'' ரெண்டு கேள்வில எதை முதல்ல கேக்குறதுனு தெரியாம பின்னிப் பின்னி ரெண்டையும் கேட்டா அம்மணி.

அவன் மொள்ளமா, ''நாளைக்கு வர்றாங்க அட்வான்ஸ் கொடுக்க''ன்னான். அவனை அப்படியே அம்மணி முன்னாலேயே கட்டிப் பிடிச்சு அழணும் போல இருந்துச்சு. ஒரு பூனை, நாய் வளர்த்திருந்தாலாச்சும் கூடவே கூட்டிப் போயிருப்பாக. இல்லனா எனக்குத் துணையா விட்டுப் போயிருப்பாங்க.

புதுப் புதுக் காலடிகள். மனிதர்கள். உடல் ஒருமுறை கூசிச் சுருங்கிற்று.

கணேசன் சுவரெல்லாம் வருடினபடி இருந்தான். ●



கா.க. கட்சியை ஆரம்பித்திருக்கிறார் விவேக். அதென்ன கா.க.கட்சி? காதலுக்குக் கல்லறை கட்டும் கட்சி. காதலில் தோல்வியுற்ற தங்கராஜ் (விவேக்) காதலிப்பவர்களைப் பிரிப்பதே கட்சியின் முக்கிய கொள்கை என அறிவிக்க ரணகளமாகிறது கதை. அப்புறம் என்ன என்கிறார்களா... ஆனாலும் ஹீரோ ஹீரோயின்ஸ், காதலிக்கின்றனர். காதலுக்குத் துணைபுரிகிறார் விவேக். எப்படி? 'இளமை இதோ இதோ' படத்தைப் பாருங்க...

# காமெடி கச்சேரி!

'அகோரி' ஆர்யா, காமெடியில் கலக்கும் படம், பாஸ் என்கிற பாஸ்கரன். ஜீவாவை எஸ்.எம்.எஸ்ஸில் இயக்கிய ராஜேஷ்.எம்.தான் இயக்குநர். அம்மணி நயன்தாரா ஹீரோயின் என்பதால், குத்தாட்டத்துக்கும் பஞ்சமிருக்காதாம். ''ஆர்யாவின் இன்னொரு பரிமாணத்தைக் காட்டும் படம்தான் பாஸ் என்கிற பாஸ்கரன்'' என்கிறார் இயக்குநர்.

பயாஸ்கோப்



தல அஜித்தும், இயக்குநர் சரணும் கைகோத்தால், கோடம்பாக்கத்தில் எதிர்பார்ப்பு எகிறும். ஏற்கெனவே இவர்களின் கூட்டணியில் 'ஹிட்' அடித்த காதல் மன்னன், அமர்க்களம்... வரிசையில் தற்போது 'அசல்' சேர்ந்திருக்கிறது. சிவாஜி ஃபிலிம்ஸ் சந்திரமுகிக்குப் பிறகு தயாரிக்கும் 'அசல்' பக்கா அசலான கமர்ஷியல் படமாம்!

''நான் இதுவரை 145 படங்களில் நடித்திருக்கிறேன். 90 இயக்குநர்களிடம் பணிபுரிந்திருக்கிறேன். ஆனால், 'மாசி' படத்தின் இயக்குநர் கிச்சா தனித்துவமானவராக இருக்கிறார். படத்தில் எந்த சீனைச் சொல்லிக் கேட்டாலும் அந்த சீனுக்குரிய டயலாக்கைச் சொல்லி மிரட்டுகிறார். எனக்கு இது வியப்பான விஷயம்'' என்று புகழ்கிறார் மாசி படத்தின் நாயகன் அர்ஜுன்.









''வாழ்நாள் முழுவதும் மகிழ்ச்சியாக இருக்க வேண்டு மென்றால் ஒரு தோட்டத்தை வைத்துக் கொள்'' - இது சீனப் பழமொழி. இந்த மகிழ்ச்சி வெள்ளம், சேலட் மேரி மனுவேல் குடும்பத்தின் தலைக்கு மேல் பெருக் கெடுத்து ஓடுகிறது! பின்னே, மொட்டை மாடியில் தோட்டம் என்றால் சும்மாவா! ''பராமரிப்பதென்பது சற்றுச் சிரமம்தான். தொட்டிகளில் மண் எடுத்து வந்து நிரப்புவது, அவ்வப்போது மண் மாற்று வது போன்ற சிரமங்கள் அனைத்துமே சிகரங் களாக மகிழ்வைத் தரும்'' என்கிறார்...

''தினமும் தண்ணீர் பாய்ச்சுவது, பூச்சி கள் அண்டாமல் பராமரிப்பது, ஊட்டச் சத்து உணவு கொடுப்பது (சாண எரு, வேப்பம் பிண்ணாக்கு, கடலைப் பிண் ணாக்கு, மண் புழு எரு, உப்பு போன்றவற் றையும், காய்கறிக் கழிவுகள், சாம்பல் சேர்ந்து மக்கிய மண்ணையும் கலந்து தயார் செய்த எரு) போன்ற வேலைகளில் செடிகளும் என்னோடு ஒன்றிவிடும் உணர்வு ஏற்படும். சில செடிகளில் மலர்கள் மலர மிகத் தாமத மாகும்போது - 'நான் எத்தனை எதிர்பார்ப்பு களுடன் காத்திருக்கிறேன், நீ ஏன் இன்னும் பூக்காமலிருக்கிறாய்?' என்று பேசுவேன். அதிசயமாக மொட்டுக்கள் விரைவிலேயே தோன்றும்.

தோட்டத்து மலர்களைப் பறித்து இறைவனுக்கு அர்ப்பணிப்பதில் ஏற் படும் மனநிறைவு, எத்தனை மலர் மாலை களை வாங்கிச் சூட்டினாலும் கிடைக்காது.

சமையலுக்குத் தேடினால் தக்காளி, பச்சை மிளகாய் இருக்காது. ஒரு நிமிடம் சுதாரித்து மாடிக்கு ஓடினால், எங்கள் தோட்டத்தில் குண்டு தக்காளியும் ஊசி மிளகாயும் தயாராகக் காய்த்திருக்கும்.

உதகை காலிஃபிளவரை மிஞ்சு மளவில் சட்டிகளில் அழகான, பெரிய, பூச்சியில்லாத காலிஃபிளவர்கள் பயிரிட்டு சர்ச்சுக்கும் காணிக்கை வைத்துள்ளேன்.

எல்லாவற்றுக்கும் மேலாக திசு வளர்ப்பு வாழைக்கன்று ருபஸ்டா ரகம் வாங்கி மாடியில் மண் நிரப்பி நட்டு அது பெரிய வாழைக்குலை விட்டது மட்டுமின்றி கன்றுகள் கூட வளர்ந்து குலை தள்ளின. மூலிகைச் செடிகளையும் பயிரிட்டு இருக்கேன்.

வானுயரம் வளரக்கூடிய மரங்களின் வாமன அவதாரம் போன்சாய். அவற்றின் இயற் கைத் தன்மைகள் மாறாமல் சிறிய தொட்டி களில் வளர்ப்பது ஓர் இனிய அனுபவம்.

தாமரை, அல்லி, வாட்டர் லில்லி, மிகவும் மருத்துவக் குணமுடைய அந்தரத் தாமரை போன்ற நீரில் வளரும் செடி வகைகள் மாடிக் குளங்களில் உள்ளன.

இத்தனை வகையான செடிகளையும் மாடித் தோட்டத்தில் பராமரிப்பதற்கு உறு துணையாக இருப்பவர்கள் எனது குடும்பத் தினர்தான். மகனும், மருமகளும் சேர்ந்து புதிய வகை அழகான செடிகள் வாங்கி வந்து பிறந்த நாள் பரிசளிப்பர்.

மனஅமைதிக்காக, சந்தோஷத்துக்காக உத கையும், கொடைக்கானலும் செல்வது தற்கா லிகத் தீர்வு மட்டுமே. தினமும் செல்ல முடி யுமா? ஆனால் நம் வீட்டில் மாடியில் தோட் டம் அமைத்தால் ஓடி ஓடிப் போய் பார்த்துட்டு வரலாமில்லே! உடற்பயிற்சியும் ஆச்சு, மனப் பயிற்சியாகவும் கடவுளைக் காணும் அற்புத நிலையைத் தரும் கலையாகவும் இருக்கு'' என்கிறார்.

இவருடைய தோட்டம், 2006ல், கோவையின் சிறந்த வீட்டு மாடித் தோட் டம் என்று பரிசு பெற்றது!

செய்தி சித்தரம்: **ஆர்.பாலா**





# கடவுள் வந்து போகும் வீடு!

# தொலைந்த 'நாம்'



விஜேந்திரா

திடீரென்று...
வீட்டிலிருந்த
என் காதலி மறைந்தாள்.

இத்தனை ஆண்டுகள்
என்னுடன் இருந்தவள்
சொல்லாமல் போனதன்
காரணமென்ன?

அவளை அறிந்தவர்களிடமெல்லாம்
விசாரித்தபோது...
என் வீட்டிலேயே அவள் இருப்பதாய்ச்
சொன்னார்கள்

உண்மையில் என் வீட்டில் இப்பொழுது
இருப்பது வேறு யாரோ...

என் காதலியைக் காணவில்லையென
யாரிடமும் சொல்வதில்லை.
அவளைத் தேடுவதே
தினசரி வேலையாய் மாறிப்போனது

வெகுநாட்களுக்குப்
பின்
என் வீட்டின் கதவு திறந்து வந்தாள்
எனது அதே காதலி.
புன்னகையுடன் அவள் முன் நிற்க,
'நீங்கள் யார்?' என்று கேட்கிறாள்.

சி.பி.செந்தில்குமார்

## மின்னல் கதைகள்



# இரவெல்லாம் இங்கேயே இருப்பேன்!

"நான் என் ஃபிரெண்டுக்கு ஐயாயிரம் ரூபாய் கடன் கொடுத்தேன். அதற்கு ஆதாரம் எதுவும் இல்லை. அவர் இன்னும் பணத்தைத் திருப்பித் தரவும் இல்லை."

"இவ்வளவுதானே? உடனே நீ அவருக்கு ஒரு லெட்டர் எழுது. பத்தாயிரம் ரூபாய் வாங்கினீங்களே... அதை எப்போ தரப்போறீங்கன்னு உடனே ஐயாயிரம் ரூபாய்தானே வாங்கினேன்னு வேகமா ரிப்ளை வரும்."

ஸ்கூலில் இன்ஸ்பெக்ஷன் நடந்தது. அதிகாரியின் முன்னிலையில் ஆசிரியர் ஏதாவது கேள்வி கேட்பதும், மாணவர்கள் போட்டி போட்டுக்கொண்டு பதில் சொல்வதும் கண்டு அதிகாரிக்கு டவுட். பின் தனியே ஒரு மாணவனை அழைத்துக் கேட்டார். "அது எப்படி? ஆசிரியர் எந்தக் கேள்வி கேட்டாலும் விடை தெரியும் என்று எல்லா மாணவரும் கை தூக்குகின்றனர். இதன் ரகசியம் என்ன?"

"எங்கள் ஆசிரியர் சொல்படி பதில் தெரிந்தவன் வலது கையையும், தெரியாதவன் இடது கையையும் உயர்த்துவோம்" என்றான்.

மண்சாலை ஓரிடத்தில் சேறாக இருந்தது. அந்த வழியில் வந்த கார் ஒன்று அதில் மாட்டிக் கொண்டது. அங்கே நின்று கொண்டிருந்த ஒருவன் தன் மாடுகளை ஓட்டிக் கொண்டு வந்து காரில் கட்டி இழுத்து காரை வெளியேற்றினான். அவனுக்குப் பணம் கொடுத்த காரோட்டி, "இப்படி பிறருக்கு உதவி செய்வதே உனக்கு வேலையாக இருக்குமே?" என்றான்.

"ஆமாம், பகல் முழுவதும் இதே வேலைதான். இரவிலும் இங்கேயே இருப்பேன். இந்த இடத்தில் தண்ணீர் ஊற்றிக் கொண்டு" என்றான்.

"நெடுஞ்சாலைகளில் விரைந்து செல்லும் மணல் லாரிகளிலிருந்து கசிகின்றன நீர்த் தாரைகள். அதனை நதிகளின் கண்ணீர்த் துளிகளென புதுக்கவிதை படைத்தவன் நம் தமிழ்க் கவிஞன். அந்தக் கண்ணீரைத் துளியூண்டாவது துடைத்து நிறுத்தும் நிமித்தமாக கட்டிடப் பணிகளுக்கென மாற்று மூலப்பொருட்கள் வந்து விட்டன!'' எனச் சொல்கிறார் புதியன புகுத்துதலில் ஆர்வம் நிறைந்த இளம் பொறியாளர் பா.சந்திரகாந்த்.

''முதலில் மணலில் இருந்தே தொடங்குவோம். ஆற்று மணல் என்ன அள்ள அள்ள அமுதசுரபியா? வழிந்தோடிய வாய்க்கால்களும், அலை ததும்பிய ஆறு




களும் கண்ணெதிரே வறண்டு போகின்றன. மழைக்காலங்களில் மட்டுமே அவை சூல் கொண்டு குறிப்பிட்ட காலங்களுக்குத் தண்ணீர் தவழ்ந்து செல்லும் வழித்தடங்களாகிப் போகின்றன. இதற்கென்ன மாற்று? 'உள்ளேன் ஐயா' என்று வந்து நிற்கிறது மலை மாவு.

அதற்கு கிரஷர் டஸ்ட் அல்லது கிரஷ்ட் ஸாண்ட் எனப் பெயர். கல் குவாரிகளில் இயந்திரங்களில் ஜல்லி உடைபடும்போது கிடைக்கும் தூளே இந்த கிரஷர் டஸ்ட். கேரளாவில் இதன் பயன்பாடு மிக அதிகம். தமிழ்நாட்டுக்கு இப்பத்தான் எட்டிப் பார்த்திருக்கு. ஒரு யூனிட் மணலின் விலையில் பாதிதான் மலைமாவு. தற்போது சேலம், சென்னை புறநகர்ப் பகுதிகளில் இதற்கெனத் தனியாகத் தொழிற்சாலைகள் இயங்கி வருகின்றன. மலை மாவு உபயோகம் அதிகரிக்கும் போது, ஆற்று மணல் சுரண்டல் மிக

**மலை மாவு உபயோகம் அதிகரிக்கும்போது, ஆற்று மணல் சுரண்டல் மிக அதிக அளவில் குறைந்துவிடும்.**

அதிக அளவில் குறைந்து விடும். அப்போது நதிகளின் நீராதாரம் பெருகும்; நிலத்தடி நீர் வளமும் குன்றாது.

அடுத்து செங்கல். இதுக்கு மூணு விதமான மாற்று இருக்கு. நிலக்கரி சாம்பலில் இருந்து தயாரிக்கப்படும் ஃபிளை ஆஷ் பிரிக்ஸ். இது எந்தளவுக்கு அதிக எண்ணிக்கையில் கிடைக்கும் என்பது தெரியவில்லை. இரண்டாவது ஹாலோ பிளாக்ஸ். நாற்புறமும் மூடப்பட்டு உள்ளே வெற்றிடம் கொண்டது. காம்பவுண்ட் சுவர்களுக்கு எட்டிப் பார்த்த ஹாலோ பிளாக்ஸ் கற்கள், தற்போது கட்டிடச் சுவர்களுக்கும் 'ஹலோ' சொல்ல வந்துவிட்டன. மூன்றாவது சாலிட் பிளாக். மிகச் சரியான, வேலை நேர சேமிப்பு மிகுந்த, பொருத்தமான

# புதுசா கட்டுங்க... பசுமை கூட்டுங்க!

✱ ப்ரீ-என்ஜினியரிங் ஸ்ட்ரக்சர்

மாற்று.

சாலிட் பிளாக் உள்ளே வெற்றிடம் அற்றது. செங்கல் போலவே வலுவானது. ஆனால் செங்கல்லை விட அளவு சற்றே அதிகம்! இரண்டடி நீளம் ஒரு அடி அகலம், ஒண்ணரை அடி நீளம் ஒரு அடி அகலம் என சாலிட் பிளாக் கற்கள் கிடைக்கின்றன. ஒவ்வொரு செங்கல்லாய் எடுத்து வைத்து சில வருடங்களில் கட்டி முடிக்கப்படும் அடுக்குமாடி கட்டிடங்களை சாலிட் பிளாக் பயன்படுத்தி சில மாதங்களில் கட்டி முடித்து விடலாம். கட்டுமானச் செலவும் மிச்சம். காலமும் மிச்சம்.

சிமெண்ட்டுக்கு முழுமையான மாற்று, இன்னமும் வரவில்லை என்றே சொல்லலாம். ஆனாலும், அதற்கான முயற்சிகள் தொடர்ந்தவண்ணம் உள்ளன.

புவி வெப்பமயமாதலைத் தடுக்கவும், சுற்றுச்சூழலைப் பாதுகாக்கவும் 'கிரீன் பில்டிங்' கான்செப்ட் நடைமுறைப் படுத்தப்பட்டு வருகிறது. அதிக அளவில் சிமெண்ட் பயன்பாடு அற்ற கட்டிட பாணி முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. அவற்றில் வெற்றி பெற்று விட்டது பொறியியல் துறை.



பா. சந்திரகாந்த்

ப்ரீ என்ஜினியரிங் ஸ்ட்ரக்ச்சர் எனப்படும் நவீனச் செயல்பாட்டில் நாம் அடியெடுத்து வைத்துள்ளோம். சிமெண்ட் சுவர்கள் இல்லை. கான்கிரீட் தளங்கள் இல்லை. பெரிய தொழிலக மற்றும் பணிமனைக் கட்டிடங்கள் பலவும் தற்போது மேற்கண்ட பாணியில்தான் கட்டப்பட்டு வருகின்றன. இரும்புத் தகடுகள், இரும்புத் தூண்களைப் பயன்படுத்தி வலுவான, சுற்றுச்சூழலுக்குக் கேடு விளைவிக்காத புதிய பாணி கட்டிடங்கள் இந்த மண்ணில் காலூன்றி நிலையாக நிற்கத் தொடங்கிவிட்டன!'' எனக் கூறுகிறார் சி.கே. என்ஜினியர்ஸ் நிறுவன உரிமையாளர் பா.சந்திரகாந்த்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

நமக்கு இருபது வயது இருக்கும் போது என்ன நினைப்போம், ஒரு ஐம்பது வயது வரையில் நன்றாக வாழ்ந்து, நிறைய சம்பாதித்து, சௌக்கியமாக இருந்து, அதன் பிறகு இந்த சம்ஸார பந்தங்களையெல்லாம் விட்டு விடலாம் என்று நினைப்போம். ஆனால், ஐம்பது வயது ஆகிறபோது என்ன தோன்றும்? 'பிள்ளைக்குக் கல்யாணம் ஆகிற வரைக்கும்தான்... அதற்கப்புறம் எல்லாவற்றையும் விட்டு விடலாம்' என்று தோன்றும். பிள்ளைக்குக் கல்யாணமும் ஆகிவிடும். 'ஒரு பேரனோ

தீயாக இருக்கக்கூடிய சம்ஸாரம் என்பதை, அமுத மழையாகப் பொழிந்து, பொழிவித்து தணித்து அணைக்கும் சக்தி படைத்தவள் ஸ்ரீ லலிதாம்பிகை. ஆகவே தான் **பவதாவசுதாவ்ருஷ்டி** என்கிற திரு நாமம்.

காட்டுத் தீயாகப் பரவும் சம்ஸார ரோகத்தைக் குளிர்விக்கிற அவள், அதே சமயத்தில் வேறொன்றும் செய்கிறாள். நாம் செய்துள்ள பாவங்கள் அப்படியே காடு மாதிரி படர்ந்திருக்கிறது. அந்தக் காட்டை எப்படி வெட்டுவது...? காட்டில் புதராக மண்டிக்

# இருள் நீக்கும் குளிர் நிலவு

பேத்தியோ பிறக்கட்டும்; அதற்கப்புறம் எல்லாவற்றையும் விட்டுவிடுவோம்' என்று எண்ணத் தோன்றும். அந்தப் பேரனோ, பேத்தியோ பத்து வயதை எட்டியதும் கேட்கும்; ''பாட்டி, பாட்டி! நான் காலேஜுக்குப் போகிறபோது நீயும் வருவியா?'' அவ்வளவுதான்! 'என் பேரன் கேட்டிருக்கான். அவன் காலேஜ் போகிற வரைக்கும் நான்கூட இருக்கணும் என்கிறான்... அவன் அந்த அளவுக்கு வளரட்டும்; அப்புறமா நான் சம்ஸாரத்தை விட்டுடறேன்' என்று முடிவு எடுத்து விடுவோம்! இப்படியேதான், காட்டுத்தீ மாதிரி சம்ஸாரத்தின் தேவைகள் ஒன்றிலிருந்து இன்னொன்றை நோக்கிப் போய்க்கொண்டேயிருக்கும். இந்த மரத்திலிருந்து அடுத்த மரம் எப்படி, எப்போது பற்றிக்கொண்டது என்பதே புரியாது; தெரியாது. இவ்வாறு காட்டுத்

கிடக்கிற மரங்களை எப்படி அழிப்பது? அதற்குத்தான் அம்பிகையே **பாபாரண்ய** குடாரிகாவாக இருக்கிறாள்.

பாப ஆரண்யம் - பாவம் என்கிற காடு பெரிதாக வளர்ந்திருக்கிறது. அதனை வெட்டுவதற்கான கோடரியாக இருக்கிறது அம்பிகையின் அருள் சக்தி.

ஆக, காட்டில் தீப்பிடித்தால் அமுத மழையாகப் பெய்து காப்பவளும் அவள் தான்; அதே காட்டில் புதர் - மரம் மண்டிப் போய் அதைச் சரிசெய்ய வேண்டும் என்றால், தேவையானதை மட்டும் விட்டு

14

ஸ்ரீ லலிதா

நான்காம் பாகம்

சுதா சேஷய்யன்

வைத்து, தேவையற்றதை நீக்குபவளும் அவள்தான். புண்யத்தை - வைத்துக் கொண்டு பாவத்தை நீக்குகிற கோடரியாக இருக்கக்கூடியவள்.

இந்தத் திருநாமத்துக்கு இன்னொரு பாடாந்திரம் உண்டு. **பாபாரண்யதவாநலா** என்று. அதுவும்கூட பொருத்தமானதே. அவள் கோடரியாக இருந்து தேவையற்றதை நீக்குகிறாள் என்பதை **பாபாரண்ய குடாரிகா** உணர்த்துகிறது; நெருப்பாக இருந்து காட்டின் மண்டிப்போன பகுதிகளை அழிக்கிறாள் என்பதை **பாபாரண்ய தவாநலா** உணர்த்துகிறது.

## துன்பத்தைத் துரத்தும் சுழற்காற்று

இந்த அம்பிகை தான் காற்றாகவும் இருக்கிறாள். சாதாரண காற்றல்ல; சுழல் காற்று! **வாதூலாவாக** இருக்கிறாள். எப்படிப்பட்ட சுழல் காற்று...?

**தௌர்பாக்யதூல வாதூலா** அவள்! துக்கம், தீமைகள், துர்பாக்கியம் போன்றவை நம்மைச் சுற்றிச் சூழ்கிற போது, பஞ்சுப் பொதியாகிய அந்த துர்ப்பாக்கியத்தை அப்படியே வீசித் தள்ளும் புயல்காற்றாக அம்பாள் இருக்கிறாள். (தௌர்பாக்கிய - துர்பாக்யம்)

ஆக, அம்பாள் நெருப்பாக இருக்க வேண்டிய நேரத்தில் நெருப்பு; காற்றாக இருக்க வேண்டிய சமயத்தில் காற்று; அமுதமழையாக இருக்க வேண்டிய சமயத்தில் அத்தகைய குளிர் மழை; சுழலாக இருக்க வேண்டிய தருணத்தில் சுழல்!



ஏன் பஞ்சுப்பொதியை தௌர்பாக்கியம் (துர்பாக்கியம்) என்றார்கள்? பஞ்சுப் பொதி என்பது அப்படியே கட்டுக்குள் அடங்காமல் நாலா திசையிலும் பறக்கும்! பார்ப்பதற்கு என்னவோ எடை குறைவாகத் தோன்றும்; ஆனால் அதைப் பிடித்து நிறுத்துவது கஷ்டம். அதேமாதிரிதான் துர்பாக்கியம் என்பதும் துக்கம் என்பதும். துக்கத்தைப் பிடித்துக் கட்டுப்படுத்த முயன்றால் அது அப்படியே கை நழுவி அந்தப் பக்கம் பறந்து போகும். சரி, அந்தப் பக்கம் போய் விட்டது; எடுத்துப் போட்டுவிடுவோம் என்று நெருங்கிப் போனால், இந்தப் பக்கம் கொஞ்சம் பறக்கும்.

அப்படியானால், பஞ்சு எப்படி சுற்றிச் சுழலுமோ அவ்வாறு சுற்றிச் சூழக்கூடிய துர்பாக்கியத்தை ஒரேயடியாகத் தூக்கி வீசி, ஒன்றுமில்லாமல் செய்யக்கூடியவள்தான் **தௌர்பாக்ய தூலவாதூலா.**

## பூர்ணிமை நிலவு

**ஜராத்வாந்தரவிப்ரபா** - ஜரை என்பது மூப்பு - வயோதிகம். மூப்பு என்கிற இருட்டு வருகிறபோது, அந்த கரும் இருள் போன்ற மூப்பினை, சூரிய கிரணங்களான தனது அருளினால் போக்கக்கூடியவள் அம்பாள்.

இவ்வாறு சம்ஸாரத்தை ஒழித்து, பாபங்களை நீக்கி, மூப்பை ஒழித்து, துர்பாக்

யத்தைத் தூக்கியடித்து எல்லாவற்றிலிருந்தும் நம்மைக் காப்பாற்றுகிறவள், அதன் பிறகு என்ன செய்கிறாள் என்றால் ....... அதற்கான திருநாமம்தான் **பாக்யாப்தி சந்திரிகா.**

பாக்யம் என்கிற குளிர்ச்சியை, சந்திரனாக இருந்து அம்ருத தாரையாக வர்ஷிக்கக் கூடியவள். அந்தக் குளிர்ச்சியை நல் வெளிச்சமாக - நிலவொளிபோல் தரக் கூடியவள். சந்திரனுக்கு இரண்டு குணங்கள் உண்டு. முதலாவது, அது அமுதத்தைத் தரக் கூடியது. இரண்டாவது, பனி போன்ற குளிர்ச்சியைத் தரக் கூடியது. அம்பிகையின் அருளாகிய நிலவொளியும் அவளைப் பற்றிய நினைவுகளின் குளிர்ச்சியைத் தருகிறது; அதேசமயம் அனுக்கிரஹத்தையும் வழங்க வல்லது

## அபிராமி பட்டரின் வைராக்கியம்

இந்தப் பூர்ணிமை நிலவாக அவள் இருப்பதை எங்கே தெரிந்து கொள்ளலாம் என்றால் அபிராமி பட்டர் கதையிலேதான். அபிராமி பட்டருக்குத் துன்பம் எப்படி வந்தது...? நெருப்புக் குண்டம் கீழே இருந்தது. அதற்கு மேலே உறி கட்டி அவரைத் தொங்கவிட்டார்கள் என்று சொல்வார்கள். இந்த வகையான தண்டனைக்கு உறிகண்டம் என்று பெயர். அபிராமி பட்டருக்கு இந்தத் தண்டனையை அரசரே விதித்தாரா அல்லது அரசர் சொன்னதற்காக அவர் தாமே உறி கண்டம் கட்டி ஏறி நின்றாரா என்பது தெளிவாக இல்லை. ஆனால், அவ்வாறு அவர் கட்டப்பட்டு நிற்க, கீழே நெருப்பு தகித்தது. பல கயிறுகளால் அவரைக் கட்டி, அதன் மேல் தொங்க விட்டு வைத்திருக்கிறார்கள். ஒவ்வொரு பாட்டு பாடி முடிந்ததும் ஒவ்வொரு கயிறாக அறுத்துக்கொண்டே வருகிறார்கள். கடைசி பாட்டு முடிகிறபோது கடைசி கட்டு அறுக்கப்பட்டு அவர் நேரே நெருப்புக்குள் விழ வேண்டியதுதான்.

சம்ஸாரம் என்னும் நெருப்பைக் குளிர்விக்கக் கூடியவள், அம்ருதவர்ஷினியாக இருக்கக்கூடியவள் அம்பிகை. அன்னை அபிராமி, அந்த நெருப்பின் தகிப்பும் சூடும் தெரியாதவாறு குளிர்வித்து, அபிராமி பட்டரைக் காத்தாள்.

அதே சமயத்திலே, புதராக இருக்கக் கூடிய அவரது பாபக் கூட்டத்தை அவளே காட்டுத் தீயாக இருந்து அழித்தாள். அவர் மனசுக்குள் இருந்த அஞ்ஞான இருளைப் போக்கினாள். உள்ளுக்குள்ளே முழுக்க முழுக்க வெளிச்சத்தையே பார்த்தார் அவர். கவலையே படாமல் இருந்தார். 'ஒருநாளும் தளர்வறியா மனம் தரும்' என்று பாடினார்.

துன்பம் வந்தபோதுகூட அதை துர்பாக்யம் என்று பார்க்காமல், அது பஞ்சுப் பொதியாகப் போய்விட்டது என்று நம்பினார். கடைசியில் அம்பாள் என்ன கொடுத்தாள் அவருக்கு என்றால், பூர்ண சந்திரிகையாக இருந்து பாக்யத்தைக் கொடுத்தாள் - **பாக்யாப்தி சந்திரிகா!** பக்தர்களுக்கு என்ன மாதிரியான துன்பங்கள் வந்தாலும் அவற்றைப் போக்கி, பாக்கியத்தைத் தருகிறாள் ஸ்ரீ லலிதாம்பிகை.

**(வளரும்)**

சென்ற வாரம் இடம் பெற்ற **நித்யா ஜகத் அதிஷ்டானா** என்கிற திருநாமத்தை **மித்யா ஜகத் அதிஷ்டானா** என்று திருத்தி வாசிக்கும்படி வாசகர்களை வேண்டுகிறோம். தோன்றி ஒடுங்கும் சிருஷ்டிக்கு அதி தேவதை அம்பாள் என்று பொருள்.

தவறுக்கு வருந்துகிறோம்.

**(-ஆர்)**

# வெட்கக்கேடு!

இந்திய ஹாக்கி அணி அதன் ஆட்டங்களுக்காக செய்திகளில் அடிக்கடி இடம் பெறுவது கிடையாது. அடிக்கடி தோன்றும் சர்ச்சைகள்தான் இந்திய ஹாக்கியை இன்னமும் ஞாபகம் வைத்துக்கொள்ள உதவுகின்றன. எட்டு தடவை ஒலிம்பிக்கில் தங்கம் வாங்கிய ஓர் அணியின் வெட்கக் கேடான நிலைமைதான் இது.

இந்திய ஹாக்கி அணி பீஜிங் ஒலிம்பிக்கில் ஆடத் தகுதி பெறவில்லை. சென்ற ஆசியப் போட்டியிலும் முதல்முறையாக ஒரு மெடலும் வாங்காமல் திரும்பியது. இந்த வருட உலகக்கோப்பையில் அது இடம்பெற்றதற்கு ஒரே காரணம், போட்டி இந்தியாவில் நடக்கிறது. இப்படியொரு மோசமான நிலையில்தான் இந்திய ஹாக்கியில் புதிதாக ஒரு சர்ச்சை கிளம்பியிருக்கிறது. அர்ஜென்டினாவில் நடந்த போட்டியில் பங்கேற்ற இந்திய வீரர்களுக்கு வாக்குறுதி அளித்தபடி தர வேண்டிய பணத்தை இன்றுவரை தரவில்லை. பொறுத்துப் பார்த்த வீரர்கள் ஹாக்கி ஸ்டிக்கைக் கீழே போட்டுவிட்டு கலகத்தில் ஈடுபட ஆரம்பித்துவிட்டார்கள்.



இந்திய கிரிக்கெட்டில் ஒரு நாள் போட்டிக்காக இந்திய கிரிக்கெட் வீரர்கள் ஒரு லட்சம் ரூபாய் பெறுகிறார்கள். ஆனால் இந்திய ஹாக்கி வீரர்களுக்கு வழங்கப்படும் சம்பளம் - வருடத்துக்கு 25,000 ரூபாய். ''எங்களுக்கு ஒழுங்கான சம்பளமும் பாதுகாப்பான நிலைமையையும் உருவாக்



ச.ந.கண்ணன்

அவர் சொன்ன இரு வசதிகளையும் தனியார் அமைப்புகள் இந்திய அணிக்கு வழங்கியிருந்தன.)

அந்த உதாரணம் ஒரு பதம்தான். சினிமாவின் உச்சநட்சத்திரம் அனுபவிக்கும் அத்தனை சகல வசதிகளும் இந்திய கிரிக்கெட் வீரர்களுக்கு வழங்கப்படுகின்றன. ஐந்து நட்சத்திர விடுதிகளைத் தவிர வேறெங்கும் இந்திய கிரிக்கெட் வீரர்களைத் தங்கவைக்க முடியாது. ஆனால் ஹாக்கி வீரர்களின் நிலைமையைப் பார்க்கும் எவருக்கும் அவர்கள்மீது பச்சாதாபம்தான் ஏற்படும். போட்டி நடக்கும் மைதானத்தில்தான் அவர்களுக்கு தங்கும் அறைகள் ஒதுக்கப்படும். ஆடுகிற ஆட்டத்துக்குச் சம்பளம் கேட்டால் 'என்ன லஞ்சம் கேட்கிறீர்களா?' என்று சொற்களால் குத்திக் காட்டப்படுவார்கள்.

2008ல் இந்திய ஹாக்கி அமைப்பின் செயலாளர் ஜோதிகுமரன் லஞ்சக் குற்றச்சாட்டுக்காகப் பணியில் இருந்து வெளியேறினார். இதற்காக இந்திய ஹாக்கி அமைப்பைத் தடைசெய்தது இந்திய ஒலிம்பிக் கவுன்சில். சென்ற வருடம் ஹாக்கி அணியின் கேப்டனை நீக்கியதற்காக பயிற்சியாளர் ஜோஸ் ப்ராஸா மீது எதிர்ப்புக் குரல் தெரிவித்தார்கள் வீரர்கள். இன்று சம்பளப் பிரச்னை தலைதூக்கியிருக்கிறது. ஹாக்கி வீரர்களிடம் தங்கம் வேண்டும் என்று கேட்டால் மட்டும் போதுமா? அவர்களைச் சொக்கத் தங்கம் போல பார்த்துக்கொள்ள வேண்டாமா?

னித் தாருங்கள்'' என்று ஓர் உலகக் கோப்பைப் போட்டியில் ஆடவேண்டிய வீரர்கள் இறைஞ்சிக் கேட்பது இந்திய ஹாக்கி நிர்வாகத்தின் சீர்கேட்டையே உணர்த்துகிறது.

**1980**ல் மாஸ்கோ ஒலிம்பிக்கில் தங்கம் வாங்கியதுதான் இந்திய ஹாக்கியின் கடைசி தங்கமெடல். அதன்பிறகு உலகக் கோப்பை மற்றும் ஒலிம்பிக் போட்டியில் மிக மோசமாகவே ஆடிவருகிறது இந்திய அணி. இதற்குக் காரணம், ஹாக்கி அமைப்பின் மோசமான நிர்வாகம்தான். 1991ல் சுல்தான் அஸ்லான் ஷா ஹாக்கிப் போட்டியை இந்தியா வென்றபோது, இந்திய ஹாக்கி ஃபெடரேஷனின் தலைவரிடம், அணியின் வெற்றிக்குப் பாடுபட்ட வீரர்களுக்கு என்ன சன்மானம் வழங்கப் போகிறீர்கள் என்கிற கேள்வி கேட்கப்பட்டது. ''என்னது சன்மானமா? அவர்களுக்கு விமான டிக்கெட், தங்கும் வசதி எல்லாம் அளிக்கப்பட்டது. வேறென்ன வேண்டுமாம்?'' என்று முகத்தில் அடித்தாற்போல பதிலளித்தார் அவர். (இத்தனைக்கும்



# பிரசங்கமாரி

திருமயிலை வாதபுரீசய்யரைக் குறித்து நீங்கள் இதுவரையில் அறிந்துகொள்ளவில்லை என்றால், அது அவருடைய தவறாகாது. அவரை நீங்கள் தெரிந்துகொள்ளும் பொருட்டு மனிதப் பிரயத்தனத்தில் என்னென்ன செய்யலாமோ அவ்வளவும் அவர் செய்துதான் வருகிறார். சாதாரணமாக, காலை 9 மணிக்கு மேல் 10 மணிக்குள் மயிலாப்பூரிலிருந்து பாரிஸ் கார்னருக்குப் போகும் மோட்டார் பஸ்களில் ஒன்றில் அவரை நீங்கள் சந்திக்கலாம். அவரை இன்னாரென்று அடையாளம் கண்டுபிடிப்பது மிகவும் சுலபமான காரியம். வெண்கலக் கடையில் யானை புகுந்தது போல் பஸ்ஸிலுள்ள மற்ற பிரயாணிகளுக்கு ஜிஞ்சாமிர்தமாகப் பிரசங்கமாரி பொழிந்து கொண்டிருக்கும் ஒருவரைக் கண்டீர்களானால், அவர்தான் பிரசித்தி பெற்ற வாதபுரீசய்யர் என்று நீங்கள் நிச்சயம் செய்து கொள்ளலாம்.

**வா**தபுரீசய்யரும் அவருடைய சிநேகிதர் ஒருவரும் மயிலாப்பூரிலிருந்து திருவல்லிக்கேணியை நோக்கிக் கடற்கரை ஓரமாக 'வாக்கிங்' போய்க் கொண்டிருந்தார்கள். வழக்கம் போல் வாதபுரீசய்யர் சண்ட பிரசண்டமாகப் பேசிக்கொண்டு வந்தார். பேச்சு வேகத்தைப் போல நடை வேகமும் அவருக்கு உண்டு. ஆதலின், அவருடன் வந்த நண்பர் எப்போதும் ஓர் அடி பின்தங்கியே வந்தார். ஐஸ் ஹவுஸுக்குப் பக்கத்தில் வந்ததும் அந்த நண்பர் அங்கே கல் மேடையில் அமர்ந்திருந்த வேறொரு நண்பரைப் பார்த்தார். அவருடன் ஏதோ பேசுவதற்காக நின்று விட்டார். அவர் நின்றது வாதபுரீசய்யருக்குத் தெரியாது. எனவே, அவர் கைகளை பலமாக ஆட்டி வழக்கம்போல்

# வண்ணத் தூரிகை

பேசிக்கொண்டே போனார். இம்மாதிரி ஒரு மனிதர் தமக்குத் தாமே உரத்துப் பேசிக்கொண்டு வரும் வேடிக்கையை பீச்சு ரோடு வழியாகப் போவோர் வருவோரெல்லாம் பார்த்து ஆச்சர்யப்பட்டார்கள். கடைசியாக

அவர் ரேடியோ ஸ்டேஷனுக்கு அருகில் வந்ததும், அங்கே நின்ற கும்பல் அவ்வளவும் தம்மை உற்றுநோக்கிச் சிரித்துக்கொண்டே பார்ப்பதைத் தற்செயலாகக் கவனித்தபோதுதான் ஏதோ விஷயம் இருக்கிறது என்று திரும்பிச் சுற்றும் முற்றும்



பார்த்தார். பின்னோடு வந்த நண்பரைக் காணோம்!

- 'திருமயிலை வாதபுரீசய்யர்' சொற்சித்திரத் திலிருந்து...

சகிப்புத்தன்மைக்கு நோபல், ஆஸ்கார், கிராமி விருது கொடுக்கப்படு மென்றால் அதில் நமக்குத்தான் மொத்த விருதும். அடடா என்ன பொறுமை என்ன சகிப்புத்தன்மை!

பிரச்னைகளில் மூழ்கியிருந்தாலும் அடுத்தவனுக்கு ஒரு கஷ்டம் என்றால், உடனே உற்சாகமாகி சுபாலென்று எழுந்து நிற்பார்கள். "இப்ப நா இல்ல, சகிச்சுக் கணும்பா, கத்துக்கோ..." என ஃபீஸ் வாங்காமலேயே க்ளாஸ் நடத்துவார்கள்.

காலையில் எழுந்தால் குடிநீர்ப் பிரச்னை, விலைவாசி, ரேஷன், டொனே ஷன், வேலையில்லாமை, கல்வி, ஈவ் டீஸிங், கடத்தல், கொள்ளை, கொலை என இரவு வரை பிரச்னைகள் நம்முடன் கபடி விளையாடினாலும், அதையெல் லாம் ஓரங்கட்டி விட்டு குடும்பமாக உட்கார்ந்து காமெடி சானல் பார்த்து புரையேறச் சிரிக்கிறோமே...

# தலையெழுத்தேன்னு சகிச்சுண்டிருக்கேன்!

லதா சேகர்

"குங்குமா, (குங்குமவல்லியின் ஷார்ட்) பசிக்கறது, ஆபீஸிலிருந்து வந்து மூணு மணி நேரம் ஆயிடுத்து. ப்ரேக்கில காபின்னு சொல்லிட்டு விளம்பரத்தை யும் விடாம பாக்கறே... தட்டுல சோற் றைப் போட்டு குழம்பைக் கலந்து என் னிடம் விட்டெறிஞ்சா சாப்பிட்டுப் போறேன். கோபால் மூத்திரத்தில ஆவக் காயா ஊறிக் கிடக்கான். அவனைக் கூட கவனிக்காம என்ன மேகலாவும் திருமதி செல்வமும்? செல்லமே, தங்கமே, செந் தூரப்பூவேன்னு நாள் முழுக்க கொஞ் சிண்டு டீவி சீரியல் பாக்கறயே... தலையெழுத்தேன்னு சகிச்சுண்டிருக்கேன்.

நம்ம குடும்ப டி.ஆர்.பி. எங்கேயோ அதல பாதாளத்தில் போயிண்டிருக்கே... எங்க தாத்தா, கொள்ளுத் தாத்தா, எள்ளுத் தாத்தா... எல்லோருமே டயத்துக்கு சக தர்மிணி கையால சுடச்சுட சாப்பிட்டு, புஷ்டியா இப்பக் கூட போட்டோல சிரிச் சுண்டிருக்கா... கொடுப்பினை... அவர் காலத்துல ஏது டீவி சீரியல்? அழும்பா மணிக்கணக்கா டீவி பாத்துண்டு அலட்சி யமா கணவரை லுக் விடற பொண்டாட்டி கெடச்சிருந்தா வருமா சிரிப்பு...? எல்லாம் தலைவிதி.. எங்கம்மா, சீரியல் பாத்துண்டே பொண்ணைப் பாத்து ஜாதகத்தைப் பாக் காம விட்டதுனால வந்த அவஸ்தை. புலம்பி என்ன பயன்? சகிச்சுக்க வேண்



# சிரிப்பாலஜி

டியதுதான்...'' இது ராமசாமி மாமாவின் தினசரி மௌனக் கதறல். (எங்க வீட்ல மட்டும் என்ன வாழுதாம்! என்று பல குரல்கள் கேட்கின்றன).

★ சீரியல், வேலைக்காரி பிரச்னைகளுக்கு ஈக்வலாக நாம் சகித்துக் கொள்வது அரசியல்வாதிகளை. அடடா, கோடிக் கணக்கில் ஊழல் பண்ண ஆக்ஸ்ஃபோர்டில் படிக்க வேண்டாமென்ற பாடத்தை மதுகோடா சொல்லி நமக்குப் புல்லரிக்க வைக்கிறார். ஊழல், லஞ்சம், மாமூல், வாரிசு, வாக்குறுதி, வளர்ப்பு சமாசாரங்கள்... என அரசியல்வாதிகளின் பன்முக டேலண்ட்டைப் பார்த்து நாம் பொங்கி யெழவேயில்லை; சகித்துக் கொண்டு போகிறோம்.

★ இரண்டு சினிமா ஹிட்டானவுடன், 'சி.எம்.' நாற்காலி பளீரென்று தெரிகின்ற ஹீரோவுக்கும் நாம் சகிப்புடன் ஆதரவு தரவேண்டும். 'முதல்வரா நடியுங்கப்பா போதும்'னு இயக்குநர் 'கட்' சொல்லி விட்டாலும் 'ரியல் முதல்வரா ஆயிட்டுத் தான் மறுவேலை' என்று ஜரூராக இருக்கும் ஹீரோக்களை நாம் தலையெழுத்தேன்னு சகித்துக் கொண்டுதான் போக வேண்டும்.

★ டீவியின் ரியாலிட்டி ஷோவில் வரும் குழந்தைகள் பண்ணும் அட்டகாசங்கள் என்னவாம்? ஆபாசப் பாடல்களைப் பாடும் போதும் சரி, அரைகுறை ட்ரஸ்ஸில் ஆடும்போதும் சரி; எப்படி பெற்றோர் ஆனந்தக் கண்ணீருடன் + சகிப்புத் தன்மையுடன் பார்க்கிறார்கள்? 'ஹய்யோ இத்தனாம் பெரிய்ய சான்ஸ்(!) கிடைச்சதே... அது எங்க பாக்கியம். ஜட்ஜ் பாராட்டினதே போதும்; ப்ரைஸ் கெடைக்காம போனா என்ன?'' என்று தாரைத் தாரையாகக் கண்ணீர் வழியும் காட்சிகளை சகித்துப் போக வேண்டிய கட்டாயம் நமக்கு!



★ ஃபேஷன் என்ற பெயரில் அருவருப்பான ஆடைகள், செல்ஃபோனும் கையுமாக இருக்கும் நவீன கர்ணன்கள், விரசமாகப் பேசும் பட்டிமன்றப் பேச்சாளர்கள்... என பல்வேறு லெவலில் நம் சகிப்புத் தன்மைக்கு சோதனை வந்து கொண்டுதானிருக்கிறது.

★ 'ரீமிக்ஸை, தலையெழுத்தேன்னு சகிச்சுட்டுப் போக வேண்டியதுதான்' என்று இசைஞானி சொன்னாலும் சொன்னார். நாம் ஒவ்வொரு டிபார்ட்மெண்டாகப் போய், சகிப்பு லெவல் எப்படி, என்ன நிலைமை என ஆராய்ந்தோம்.

தேங்க்யூ ராஜா...



ரேவதிக்கு வயது 43. எம்.ஏ படித்துவிட்டு குடும்பத்தை நிர்வகிக்கும் ரேவதியின் கடந்த பத்தாண்டு கால உடல் உபாதைகளையும் அதற்காக அவள் செலவிட்ட மருத்துவ பில்லையும் பார்த்தால் ரத்தக் கண்ணீர் வரும்.

கேஸ் ட்ரபுள், கழுத்து வலி, தலைவலி ஒரு பக்கமா மரத்துப் போகுது, திடீர் திடீர்னு நெஞ்சுல வந்து சுள்ளுன்னு வலி, உடம்பெல்லாம் வியர்த்துப் போயிடுது', கால் மூட்டுத் தேய்மானம், வீட்டை விட்டு வெளியே போக பயமா இருக்கு. ஏன்னா வீட்ல இருக்குறவரைக்கும் நல்லாதான் இருக்கேன். வெளியே போனாலே ஒரு மாதிரி மயக்கம், தலைசுத்தல் வந்துடுது' - இதெல்லாம் ரேவதியின் உடல் பிரச்னைகள்.

# கற்பனை கஷ்டங்கள்

மாண்புமிகு மனத்தின் மனோ தற்காப்புகளையெல்லாம் சென்ற வாரம் பார்த்தோம்.

அதே மனோதற்காப்பு எப்படி உடல் உபாதைகளாக 'சொமட்டைசேஷன்' (Somatization) வெளிப்படுகிறது என்பதையும் பார்ப்போமா?

டாக்டர்.பி.ஆனந்தன்

''இந்த உபாதைகளுக்காக நரம்பியல் நிபுணர், இதயவியல் நிபுணர் (Cardiologist). குடல் இரைப்பை டாக்டர், ஆர்த்தோ டாக்டர், காது - மூக்கு - தொண்டை டாக்டர், கண் டாக்டர், ருமடாலஜி (Rheumatology) டாக்டர் இப்படி இருபதுக்கும் அதிகமான

## ாண்புமிகு மனம்-2

ஸ்பெஷலிஸ்ட்டுகளைப் பார்த்து இதுவரைக்கும் என் உடம்புல எடுக்காத டெஸ்ட்டே கிடையாது. தலைக்கு மட்டும் கடந்த பத்து வருஷத்துல பதினாலு தடவை எம்.ஆர்.ஐ ஸ்கேன் எடுத்துட்டேன். எல்லா டாக்டருங்களும் எல்லா டெஸ்ட்டையும் பார்த்துட்டு கடைசியில சொல்றது, 'உனக்கு உடம்புல எந்த வியாதியும் இல்லம்மா!' என்கிற ஸ்டேட்மென்ட்தான். டாக்டர் சொல்ற அன்னைக்கு நல்லாயிட்ட மாதிரி இருக்கும். வீட்டுக்கு வந்து ரெண்டு மூணு நாள்ல மறுபடியும் அதே பிரச்னை!

என் வீட்டுக்காரரும் எவ்வளவோ பொறுமையா பத்து வருஷமா என்னை வேற வேற டாக்டர்கிட்ட கூட்டிட்டுப் போறவரு, இப்பவெல்லாம், 'டாக்டர் ஏதாச்சும் பெருசா வியாதி இருக்குன்னு சொல்லணும்னு எதிர்பார்க்கறியா?'ன்னு கேட்கிறார்.

என் பிரச்னையைக் கடவுள்கிட்டதான் சொல்லணும்னு போன இடத்துல, மதம் வேற மாறிட்டேன். மதம் மாறி ஆறு மாசத்துக்கு எல்லாமே நல்லாத்தான் இருந்துச்சு. ஆண்டவன் சரி பண்ணிட்டார்னு நினைச்சு சந்தோஷப்படுறதுக்குள்ள மறுபடி அதே பிரச்னை!

நானும் அக்குபஞ்சர், யுனானின்னு நிறைய ட்ரை பண்ணிப் பார்த்துட்டேன். யோகா - மெடிடேஷன் டெய்லி பண்ணிக்கிட்டு இருக்கேன். எதுலேயும் என் பிரச்னை

## சென்ற வார பிரச்னைக்கான தீர்வு

குடிக்கு அடிமையானவருக்கு உதவ வேண்டும் என நினைக்கும் அவரின் நலம் விரும்பிகளான மனைவி, நண்பர்கள் மற்றும் குடும்பத்தினர், 'அவர் குற்றவாளி அல்ல நோயாளி' - என்பதைத் தெளிவான மனநிலையுடன் புரிந்துகொள்ள வேண்டும்.

குடிக்கு அடிமையாவது (Alchohol addiction) உண்மையிலே சர்க்கரை வியாதி, ஆஸ்த்துமா மாதிரி, மூட்டு தேய்மானம் மாதிரி மூளை நரம்பு மண்டலம் சம்பந்தமான ஒரு நோய் இந்த நோய். கணிசமான சதவிகிதம் மரபணுக்கள் ரீதியாக வருவதாக விஞ்ஞானம் கண்டறிந்துள்ளது.

அறிவுரை, ஆலோசனை, 'இனி ஒரு சொட்டு குடிச்சாகூட லிவர் கெட்டுப் போய் செத்துடுவே' போன்ற பயமுறுத்தல்கள் மூலம் குடி நோயின் தீவிரம் அதிகமாகுமே தவிர குறையாது. என்னதான் செய்வது?

அவரை மதித்து ஏற்றுக் கொள்ள வேண்டும். ''நீ உண்மையிலேயே நல்லவன்தான். நீயும் குடியிலிருந்து வெளியே வரவேண்டும் என்ற எண்ணத்துடனும் குற்ற உணர்ச்சி



யுடனும்தான் தினம் தினம் குடிக்கிறாய். ஆனால், எங்களுடைய அறிவுரைகளாலும், அவமானப்படுத்தும் பேச்சுகளாலும் உனது ஈகோ 'ஆமாம் நான் அப்படிதான் குடிப்பேன்' என்று உன்னைப் பேச வைக்கிறது. உனது மனக்கஷ்டத்தை உன் நிலையில் இருந்து என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. எப்படி டைஃபாய்டு நோயை மனக்கட்டுப்பாட்டால் சரியாக்க முடியாதோ? அதுபோலத்தான் குடியும். பழக்கம் என்ற படியைத் தாண்டி அடிமைத்தனம் எனும் நோயாகும்போது அது உன் கையில் இல்லை என மருத்துவர்கள் சொல்கிறார்கள்' - என்ற நம் எண்ணத்தை நோயாளியை உணர வைக்க வேண்டும். உடனே இதை மனப்பாடம் செய்து ஒப்பித்தால் என்ன நடக்கும் எனச் சொல்ல வேண்டியதில்லை! இந்த எண்ணத்தை ஒரு கரிசனமான பார்வையாலும், அன்பான தொடுதலாலும், அவரைப் பேசவிட்டு சில மணி நேரங்கள் கேட்கும் பொறுமையினாலும் உணர வைக்க முடியும். இப்படி சொல்வது சுலபம். ஆனால், குடிநோயாளியின் குடும்பமும், குழந்தைகளும் பல ஆண்டுகளாக அவரின் நடவடிக்கைகளால் தொடர்ந்து பாதிக்கப்பட்டிருப்பதால் கரிசனமான பார்வையோ, அன்பான தொந்தரவோ பொறுமையான கேட்டலோ, கடினம்தான். 'அவரைப் பார்த்தாலே எரிச்சல்தான் வருகிறது' என்பதுதான் அவர்களது மனோநிலை. ஆனால், காலத்துக்கும் உணர்ச்சி வயப்பட்டு அழுவதில், புலம்புவதில் என்ன பயன்? உண்மையை உணர்ந்து உதவி செய்வதுதானே சரியானது.

சரியாகலை. கடைசியா எங்க குடும்ப டாக்டர் பைத்தியக்காரப் பட்டம் கட்டி, உங்ககிட்ட அனுப்பி வைச்சிருக்காரு'' - பெரிய லெக்சர் முடித்த களைப்போடு நிறுத்தினார் அவர்.

இவர் போலவே லட்சக்கணக்கான மனிதர்கள் 'எதைத் தின்னால் பித்தம் தெளியும்' என்ற கதையாக யார் என்ன சிகிச்சை சொன்னாலும் முயற்சி செய்து பார்த்து பல லட்சங்களைக் கடன் வாங்கி, சொத்தை விற்றுச் செலவு செய்துவிட்டு கடைசியில் துளியளவும் நம்பிக்கை இல்லாமல்தான் மனநல மருத்துவரிடம் வருவார்கள்.



**“என் பிரச்னையைக் கடவுள்கிட்டதான் சொல்லணும்னு போன இடத்துல, மதம் வேற மாறிட்டேன்.”**

இவர்களின் உடல் உபாதைகளுக்குக் காரணம் Somatization Disorder எனப்படும் மனதினால் ஏற்படக்கூடிய ஒருவித உடல் நோயாகும். இதை எப்படி கண்டறிவது? எல்லா டெஸ்ட்டும் நார்மல் என்றால் அப்புறம் ஏன் அந்த குடல் பிரச்னையும், தலைச்சுற்றலும் அவ்வளவு கஷ்டத்தை ஏற்படுத்துகின்றன? எங்கே என்ன பிரச்னை? மனத்தினால்தான் என்றால் அவர் படும் கஷ்டங்கள் கற்பனையானவையா?

அடுத்த வாரம் பார்ப்போம்..

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

? ''திருட்டு சி.டி வருவதற்குக் காரணம் சினிமாக்காரர்கள்தான். முச்சந்தியில் ஒரு பொருளை வைத்துவிட்டு, முதல்வரிடம் முறையிடுவதில் பயன் என்ன?'' என்று கேட்கிறாரே ரஜினி?

! அப்புறம் ஏன் மற்ற சகாக்களுடன் போய் முதல்வரைப் பார்த்து விண்ணப்பித்தாராம்? முதல்வரும் கடும் நடவடிக்கை அறிவிக்க, அதை அறிவித்ததற்காக ஒரு பாராட்டுவிழா வைத் திரையுலகம் ஏற்பாடு செய்ய, பிப்ரவரியில் நடக்கவுள்ள அந்நிகழ்ச்சியிலும் பங்கேற்கப் போகிறாரே?

● பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? ''காந்தியின் வழியில்தான் நடந்து வருகிறார் சோனியா காந்தி'' என்று ஈ.வி.கே.எஸ்.இளங்கோவன் கூறியுள்ளது பற்றி...?

! இளங்கோவன், இளங்கோ அடிகளின் வழியில்தான் நடந்து வருகிறார் என்று சொல்வது எத்தனை அபத்தமோ, அத்தனை அபத்தம் இது.

● க.எத்திராஜ், விளமல்

? ''தெலங்கானா மாநிலம் விரைவில் உதயமாகும்'' என்று சந்திரசேகர ராவ் கூறியிருக்கிறாரே?

! தெலங்கானா உதயமாகிற வேகத்தில், விசால ஆந்திரத்தின் அமைதியும் வளர்ச்சியும் அஸ்தமனமாகும் என்பதற்கான அறிகுறிகளை, அவர் பொருட்படுத்தாதது தான் ஆபத்து!

● பா. அசோக், பிள்ளையார்குளம்

? ''உலகை அச்சுறுத்தும் தீவிர



* வீண் விண்ணப்பம்!

# ஆஸ்திரேலிய நிறவெறி எப்போது அடங்கும்?

வாதத்தை, போலீஸ் அல்லது ராணுவம் மூலம் அடக்கிவிட முடியாது; பேச்சு வார்த்தை மூலமாகத்தான் ஒழிக்க முடியும்'' என்கிறாரே அமைதிக்கான வாழ்நாள் சாதனையாளர் விருது பெற்ற சமூக சேவகர் ஆஸ்கர் அலி..?

! தீவிரவாதம் பயங்கரவாதமாக மாறும் முன்னரே பேச்சுவார்த்தை நடத்தி, சுமுகத் தீர்வு காணும் தீர்க்கதரிசனம் செயல்பட்டால், ஆஸ்கர் சொல்வது சரி. பயங்கரவாதமாக மாறிய பின்னர், வலிமையைக் காட்டி, 'வளைந்து கொடுக்கவும் தயார்' என்று உணர்த்துவதே புத்திசாலித்தனம்.

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

? ஓய்வு பெற்ற அரசு ஊழியர்களை ஒப்பந்த முறையில் நியமிக்கும் அரசு ஆணைக்கு அ.தி.மு.க. பொதுச் செயலாளர் ஜெ. எதிர்ப்பு தெரிவித்திருப்பது பற்றி...?

! ரொம்ப சரி. 'தற்காலிக ஏற்பாடுதான்' என்று முதல்வர் ஜகா வாங்குகிறார். தற்காலிக ஏற்பாடாகக்கூட தவறான முன்னுதாரணம்.'



✱ நியாய எதிர்ப்பு

● வி.ஜி. சத்தியநாராயணன்,
சென்னை - 61

? இந்தியர்கள் மீது உள்ள நிறவெறி ஆஸ்திரேலியர்களுக்கு எப்போது அடங்கும்?

! ஆஸ்திரேலிய அரசு குண்டர்களைக் கட்டுப்படுத்த கடும் நடவடிக்கை எடுப்பதுடன் 'நிறவெறியும் பொறாமையும் அந்நாட்டின் வளர்ச்சிக்கு இடையூறாகவே இருக்கும்' என்பதை, மக்களுக்குப் புரிய வைக்கும்போது.

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்

? தமிழக சட்டசபையில் கவர்னர் பர்னாலா ஆற்றிய உரை பற்றி தராசு கருத்து...?

! சட்டசபையில் தம்மைப் புகழ்ந்து பேசி நேரத்தை வீணாக்க வேண்டாம் என்று எம்.எல்.ஏக்களுக்கு அறிவுரை கூறும் முதல்வர், ஆளுநர் உரையில் இவ்வளவு புகழ்ச்சியை அனுமதித்ததுதான் புதிர்! நிற்க. மேலும் பல உற்பத்திக்கு உதவாத செலவினங்களையே அவ்வுரை பட்டியலிட்டுள்ளதேயொழிய, வளர்ச்சிக்கான அறிவிப்புகள் எதுவும் குறிப்பிடும்படி இல்லை.

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

? இடைத்தேர்தல் நடத்தி அரசுக்கு ஏற்படும் வீண் செலவைத் தடுக்கவே தமது எம்.எல்.ஏ பதவியை ராஜினாமா செய்யவில்லை என்கிறாரே எஸ்.வி.சேகர்?

! கட்சி சார்பில்லாத எம்.எல்.ஏவாக நீடித்து,



✱ மறக்கும் ஆபத்து!



✱ அபத்த ஒப்பீடு!

முதல்வருக்கு ஐஸ் வைத்துக் கொண்டிருக்கும் எஸ்.வி.சேகர், 'இடைத் தேர்தல் வீண் செலவு' என்று பேசுவது, வாக்காளர்களுக்குக் கொடுக்கும் மைலாப்பூர் 'ஹல்வா!'

● டா.ஆசீர் டேவிட், நாகர்கோவில்

**? பரீட்சை கேள்வித்தாள் முறையில் மாற்றம் கொண்டுவர அரசு திட்டமிட்டிருக்கிறது என்கிறாரே, மத்திய அமைச்சர் கபில் சிபில்?**

! அதற்கு முன்னதாக ஆசிரியர்களின் தரத்திலும் மனப்பாங்கிலும் உயர்ந்த மாறுதல் முதலில் வேண்டும்; இல்லையேல் தேர்வு அணுகுமுறை மாற்றமே மேலும் ஒரு பரீட்சையாகிப் போகும்!

● வி.ஜி.சத்தியநாராயணன், சென்னை-61

**? உண்மை ஏன் பல சமயங்களில் உறங்கி விடுகிறது?**

! உண்மை உறங்குவதில்லை; உண்மையை அறிந்தவர்கள்தாம் உறங்குகிறார்கள். காரணங்கள்: நமக்கேன் வம்பு என்ற சுயநலம்; அல்லது பின் விளைவு குறித்த பயம்.

❑ ரூ.150/- பரிசு பெறுபவர்:
கே.என்.சிவம், பெங்களூரு

★ ரூ.75/- பரிசு பெறுபவர்:
ஆர்.ராஜதுரை, சீர்காழி

● ஆர்.ராஜதுரை, சீர்காழி★

**? ''ஒய் நாட்'' என்று ஆங்கில பெயரில் கம்பெனி, 'தமிழ் படம்' என்று டைட்டிலில் 'ப்' போடாத எழுத்துப்பிழை - இவற்றுக்குச் சொந்தக்காரர் முதல்வரின் பேரன் தயாநிதி அழகிரி...?**

! யார் பிழைகளையும் நாம் கவனக்குறைவு, அறியாமை என்ற காரணங்களுக்காக மன்னித்து விடலாம். செண்டிமென்ட் நியூமராலஜி எனில் பரிதாபப் படவேண்டியதுதான்!

● கே.என்.சிவம், பெங்களூரு ❑

**? ரெட்டி சகோதரர்கள் முரண்டு பிடித்த போது அவர்களைச் சமாதானப்படுத்த கர்நாடகா முதல்வர் பறந்து பறந்து டெல்லி சென்ற விமானச் செலவு இருபது லட்சமாம்! இது மக்கள் வரிப்பண விரயம் தானே? கட்சி விவகாரம் பற்றிப் பேச மக்கள் வரிப்பணமா?**

! விமானச் செலவு இருபது லட்சம் ரூபாய் என்பது கொசுறுதான்; ரெட்டி சகோதரர்கள் (ஆந்திர) கர்நாடக கனிமச் சுரங்க உரிமங்களின்மூலம் அனுபவித்து வரும் ஆதாயங்கள், பல்லாயிரம் கோடி மதிப்புள்ள மக்கள் சொத்து! ○


✱ மாற்றுப் பரீட்சை!


✱ மைலாப்பூர் அல்வா!


✱ அனுமதித்த புகழ்ச்சி!

ஜாலி ஏரியா

நேர்காணலுக்கு வந்த வண்டு முருகன் மேனேஜர் எதிரில் அமர்ந்திருக்கின்றான். மேனேஜர் சான்றிதழ்களைப் பார்த்துவிட்டு. ''உன் பேரு என்ன?'' என்று கேட்டார்.

''ஏன்?''

''கண்ணாடி உடைஞ்சு போச்சு. அதான் தெரியல.''

''வண்டு முருகன்''

''வேலை குடுத்தா என்ன பண்ணுவ?''



# வண்டு முருகன், டபுள் எம்.ஏ.

''இவ்வளவு நேரம் என் சான்றிதழைப் பார்த்துக்கிட்டுதானே இருந்தீங்க? அதுல இருக்கே?''

''இருக்கு. தெளிவாத் தெரியலை.''

''வேலையைப் பலகாரமா செய்ய முடியும்? வேலைதான் செய்ய முடியும்!''

''கேட்டதுக்கு மட்டும் பதில் சொல். எந்த ஊர்? எனக்குக் குருவாயூர்.''

''அப்போ என் ஊரும் குருவாயூர்தான்.''

''எந்த நடிகை பிடிக்கும்? எனக்கு நமீதாதான் பிடிக்கும்.''

''எனக்கும் நமீதாதான் பிடிக்கும்.''

''எனக்கு வான்கோழி பிடிக்காது. மயில்தான் பிடிக்கும். உனக்கு?''

''மயில்தான் பிடிக்கும்.''

''சப்பாணி சண்டைக்கு வருவானே? ஏன்டா கோமுட்ட, எனக்குப் பிடிச்சத நா சொன்னா, நீயும் அதையே சொல்றே? பைத்தியமா?''

''பைத்தியத்தோடு சேர்ந்தா பைத்திய மாதானே மாறணும்?''

''ஏன் மாறணும்?''

''வேலை கிடைக்கத்தான்!''

''அப்போ எங்க அலுவலகத்துல வேலை பாக்கறதுல உறுதியா இருக் கியா?''

''உறுதியா மட்டும் இல்ல. இறுதி யாவும் இருக்கேன்.''

''அப்போ இன்டர்வியூவை ஆரம்பிக் கிறேன்.''

''இவ்வளவு நேரம் கேள்வி கேட்டது?''

''இன்டர்வியூ கேட்டகரிக்கு வராதது. பினாயில் பாட்டிலைப் பார்த்திருக்கியா?''

''பார்த்திருக்கேன்.''

''ஒரு கம்பெனி பேரைச் சொல்லு?''

''புல்டாக் பினாயில்!''

''வெரிகுட்! இதைப் பயன்படுத்தற துக்கு முன் என்ன செய்யணும்?''

''நல்லா குலுக்கணும்.''

''வெரிகுட். எந்த அளவுக்குத் தண்ணி யில கலக்கணும்?''

''தண்ணி எடுக்கற அளவுக்குத் தகுந்த மாதிரி கலக்கணும்.''

''வெரிகுட். வெரிகுட். துடைப்பானில் நனைச்சு பினாயிலை எடுக்கறது சிக் கனமா? கையில் தெளிக்கறது சிக் கனமா?''

''கையில் தெளிச்சுத் துடைக்கறதுதான் சிக்கனம்.''

''பினாயில் டெஸ்ட்டில் பாஸா யிட்டே. அடுத்து ரெஸ்ட் ரூம் பிரஷ் பத்திய டெஸ்ட்டுக்குப் போகலாம்.''

''அதைப் பத்தி எதுக்குத் தெரிஞ் சிக்கணும்?''

''உன் வேலையே தரைகளைத் துடைக் கறதும் டாய்லெட் கழுவறதும்தானே?''

''அடப்பாவி! இந்த வேலைக்கா இவ்வளவு கேள்வி கேட்டே? நா டபுள் எம்.ஏ.!''

''டபுள் எம்.ஏ.ன்னா கொம்பா முளைச்சு இருக்கு? இந்த வேலைகூட தற்காலிகமானதுதான். மூணு மாச மெட்டர்னிட்டி லீவில் போயிருக்கறதால இருக்கற காலி இடம்! இதுக்கே மந் திரிங்க, எம்.பி.ங்க பரிந்துரை வேற. வேணுமா? வேணாமா?''

''இந்தக் காலத்தல படிச்சவங்க கதி என்னங்கறது புரிஞ்சிடுச்சு. குடும்பம் இருக்கே? வேலை கிடைக்கறவரைக்கும் செய்யறேன்.''

''உனக்கு இதை ஏன் குடுக்கறேன் தெரியுமா?''

''என் மேல இருக்கற அய்யோ பாவத் தால.''

''பாவமாவது? புண்ணியமாவது? பாதிச் சம்பளம்தான் தருவேன். மீதி பாதியை நான் அன்பளிப்பா எடுத்துக் குவேன். ஓ.கே.வா?''

''குஷ்டரோகி கையில இருக்கற வெண்ணெயைத் திருடறதுக்குப் பேர் தானே லஞ்சம்? பினாயில் பாட்டில் கணக்கு கேக்க மாட்டீங்களே?''

''ஏன்?''

''பாதிச் சம்பளத்தைச் சரிக்கட்டத் தான்'' என்றபடி வேலையைக் கவனிக்கப் புறப்படுகிறான் வண்டு முருகன். ●

**வீ**ட்டு வாசல்ல கேமரா, ஃபங்ஷன் ஹால், ஜிம், நீச்சல்குளம்னு 100% பாதுகாப்போடு சென்னை முகப்பேரில் நூறு பிளாட்களை கட்டியிருக்கும் இந்திரா பவுண்டேஷனின் நிர்வாக இயக்குநர் வி.ஜி.ராஜேந்திரனின் துணைவியாரும் அந்நிறுவனத்தின் இயக்குனருமான திருமதி இந்திரா ராஜேந்திரனை சந்தித்த போது...

“**இ**ந்திரா ஃபவுண்டேஷனை தொண்ணூறில் ஆரம்பித்தோம். இதுவரை ஏறக்குறைய ஐம்பது பிளாட்ஸை கட்டி முடிச்சுட்டோம். ஆரம்பத்தில் ஒண்ணரை கிரவுண்டி

# கிரீன் ஹவுஸ் கனவு!



## அண்ணா சொன்ன

**ஒ**ரு ஓவியன் படம் தீட்டினான்.
அதில் ஒரு பசு புல்
மேய்ந்துகொண்டிருப்பதை தீட்டியிருப்பதாகச்

லிருந்து துவங்கினோம். இப்போ 3 ஏக்கர் வரை கட்டுமான வேலையை எடுத்து முடிக்கிறோம். மணல், செங்கல்லுக்கு மாற்றாக நிறைய புதுப் பொருள் வந்திருக்கு... ஆனால் எந்தப் புதிய பரிசோதனை

## "மாற்றுப் பொருட்களை கஸ்டமர்களின் கனவு வீட்டில் திணிக்கக்கூடாது"

முயற்சிகளையோ மாற்றுப் பொருளையோ இதுவரை பயன்படுத்தியது இல்லை. அறுதியிட்டுச் சொல்ல முடியாத பொருட்களை கஸ்டமர்களின் கனவுகளில் திணித்து விளையாடக் கூடாது என்பது என் எண்ணம். இந்தத் துறையில் இதற்கென பிரத்யேகமான படிப்பும் (சிவில் பொறியியல்), உபரியான அறிவும் (இன்ட்டீரியர், பிளம்பிங், வுட்வொர்க், எலெக்ட்ரீசியன்... இப்படி) இரவு பகலின்றி உழைப்பும், கூடவே அதிகமான பண முதலீடும் தேவை என்பதால் இந்தத் துறையில் பெண் சாதனையாளர்கள் குறைவு. ஒன்றோடொன்று தொடர்புடைய ஐஎஸ்ஐ முத்திரை கொண்ட பொருட்களை மட்டுமே பயன்படுத்தி ரீசைக்கிளிங் பார்முலாவோடு (அதாவது துணி துவைத்த



தண்ணீரை கூடச் சுத்தப்படுத்தி தோட்டத்துச் செடிக்கு ஊத்துற அளவு) இயல்பான காற்றும் வெளிச்சமும் இருக்கும்படி கட்டுற வீடு கிரீன் அவுஸ்னு சொல்லுவாங்க. எங்களோட அடுத்த கட்டுமானத் திட்டம் அதுதான்'' என்று சொல்லும் இவருக்கு, இவங்க துறையின் கஷ்டங்களைச் சொன்ன 'கோலங்கள்' தொடரின் சாதிக்கும் பெண்ணான அபி கேரக்டர் ரொம்பப் பிடிக்குமாம்.''

- அமிர்தா

## கதை!

சொன்னான். ஆனால் படத்தில் பசுவும் இல்லை! புல்லும் இல்லை! அது வெற்றுத்தாளாகவே இருந்தது. புல் எங்கே? என்று கேட்டதற்கு பசு சாப்பிட்டுவிட்டது என்றான். பசு எங்கே? என்று கேட்டபோது, அது புல்லைத் தின்றுவிட்டதால் விரட்டி விட்டேன் என்றான்!

- கார்த்திகா ஆதித்தன்

''கலைஞர் ஆட்சிக் காலத்தில்தான் பல்வேறு வீட்டு வசதி திட்டங்கள் தீட்டப்பட்டன. 1971லேயே ஏழை எளிய மக்களுக்காக ஒரு லட்சம் வீடுகளைக் கட்டிக் கொடுத்தவர். அவர் இப்போது 21 லட்சம் வீடுகளை கட்டப் போகிறார். இப்படி மக்களின் குடியிருப்புத் தேவைகளை நிறைவேற்றி வைக்கும் கலைஞரின் பெயரே, வீட்டு வசதித் திட்டங்களுக்கு பொருத்தமானது'' என்று பெருமிதப்படுகிறார் தமிழக வீட்டு வசதித் துறை அமைச்சர் ஐ. பெரியசாமி.

**''வீட்டு வசதித் துறையில் என்ன நடந்து கொண்டிருக்கிறது?''**

ஐ.பெரியசாமி: தனியார் ஃபிளாட் பிரமோட்டர்களை நாடுவதை விட, வீட்டு வசதி வாரிய குடியிருப்புகள் மீது மக்கள் அதிக நம்பிக்கை வைத்துள்ளனர்.

**செம்மொழி மாநாட்டையொட்டியும் கோவையில் புதிய குடியிருப்புகள் கட்டப்பட இருக்கின்றன.**

அதற்குக் காரணம், தரமும் விளைவும் தான். தவிர குலுக்கல் முறையில் எல்லாப் பிரிவினருக்கும் முறையான ஒதுக்கீடு. இன்று சென்னை, மதுரை, கோவை போன்ற நகரங்களில், வீட்டு வசதி வாரியக் குடியிருப்புகளை ஒட்டித்தான் நகர்ப்புறங்கள் விஸ்தரிக்கப்படுகின்றன. எங்கள் குடியிருப்புகள் 90 சதவிகிதம் நடுத்தர மற்றும் குறைந்த சம்பளமுடைய மக்களை டார்கெட் செய்தே கட்டப்படுகின்றன. 2006-07 மற்றும் 2007-08ம் ஆண்டுகளில் 950 வீடுகள் மற்றும் அடுக்கு மாடிக் குடியிருப்புகள் கட்டப்பட்டன. இது தவிர, 1112 மனைகளும் லே-அவுட் போடப்பட்டு மக்

ளுக்கு விற்கப்பட்டன. 2008-09ம் ஆண்டில் 22,000 வீடுகள், அடுக்குமாடிக் குடியிருப்புகள் மற்றும் மனைப்பிரிவுகள் கட்டிக் கொடுக்கப்படும் என்று அறிவித்திருந்தோம். அந்த அடிப்படையில் 4300 இடங்களில் பணிகள் துவங்கி நடந்து கொண்டிருக்கின்றன. இந்த 22,000 வீடுகளில் 2260 குடிசை மாற்றுக் குடியிருப்புகள். 3530 தமிழ்நாடு அரசு ஊழியர் வாடகைக் குடியிருப்புகள்.

**வீட்டு வசதிவாரியக் குடியிருப்புகளில் தவணைகளைக் கட்டி முடித்த பின்பும் பத்திரத்தை வாங்குவது பெரிய போராட்டமாக இருக்கிறதே?**

இந்தப் பிரச்னை 1980களில் இருந்தே இருக்கிறது. எந்தக் காரணம் கொண்டும் தவணை முடிந்தவர்களுக்குப் பத்திரம் திருப்பிக் கொடுப்பதில் தாமதம் இருக்கக்கூடாது என்று அதிகாரிகளுக்கு அறிவுறுத்தப்பட்டுள்ளது. குறிப்பாகச் சொல்வதானால், மதுரை மற்றும் திண்டுக்கல்லில் இந்தப் பிரச்னையைத் தீர்த்து வைக்க 'விரைவுப் பாதை' வழி கையாளப்பட்டு வருகிறது.

**வீட்டு வசதி வாரியக் குடியிருப்புகள், விரைவில் விரிசல் விட்டுப் பழுதாகிப் போகின்றனவே!**

வீட்டு வசதி வாரியக் குடியிருப்புகளை பழுதுபார்ப்பதற்கு நாங்கள் முன்னுரிமை கொடுக்கிறோம். குறிப்பாக, அரசு ஊழியர் குடியிருப்புகள் எங்கள் பராமரிப்பில்தான் இருக்கின்றன. சென்னை பட்டினப்பாக்கத்தில் பழுதாகிப் போன குடியிருப்புகளை முற்றிலுமாக இடித்து விட்டு, புது குடியிருப்பு கட்டும் பணி நடந்து வருகிறது. வீட்டு வசதி வாரியக் குடியிருப்புகள் நூறு தயாராக இருக்கின்றன எனில், அதற்கு 300 பேர் மனு செய்கிறார்கள். இதிலிருந்தே எங்கள் கட்டுமானம் தரமானது என்றும், விலை சகாயம் என்றும் தெரியவரும். கலைஞர் ஆட்சியில், வீட்டு வசதி வாரியம் நிதி நிலையில் தன்னிறைவு பெற்றுள்ளது. செம்மொழி மாநாட்டையொட்டி கோவையில் புதிய குடியிருப்புகள் கட்டடப்பட இருக்கின்றன.

**நகர்ப்புறங்களில் பல்லாண்டுகளாக அங்கீகாரமில்லாத குடியிருப்புகளை அப்புறப்படுத்தும்போது, அந்த மக்களை தொலைதூரத்திற்கு துரத்தி விடுவது ஏன்?**

''நகரின் அடிப்படைக் கட்டுமான வசதிகள், போக்குவரத்து ஆகியவற்றுக்காக அங்கீகாரமில்லாத குடிசைப் பகுதிகள் அகற்றப்படுகின்றன. அவர்களுக்குப் புதிய வீடுகள் கட்ட அரசு இடம் வழங்குகிறது. கூடிய மட்டும் அவர்களுக்கு மிகக் குறைந்த அளவு சிரமமே இருக்கும் வகையில் பார்த்துக் கொள்கிறோம்.

# கலைஞர் பெயரே பொருத்தம்!

சந்திப்பு: **ப்ரியன்**
படம்: **ராஜன்**

'வாழ்க்கைன்னா சேலஞ்ச் இருக்கணும்'னு கொஞ்சம் உசுப்பேத்தி 140 எழுத்துகளில் ட்விட்டர் கதை எழுத முடியுமானு கேட்டதும் வாசகர்களிடமிருந்து வந்து குவிந்தன மலைபோல் கடிதங்கள். அதில் சிறந்த 10 கதைகளை தேர்வு செய்துள்ளோம்.

வெற்றி பெற்ற பத்து பேருக்கும் தலா ரூ.200/- பரிசு. தேர்வான கதைகள் இங்கு பிரசுரமாகியுள்ளன. கலந்து கொண்ட அனைவர்க்கும் பாராட்டுகள்!

(ஆ-ர்)

தீர்த்த யாத்திரை முடிந்து திரும்பி
துறவியை ஊர் எல்லையில் சந்தித்தா
சிஷ்யன்.

''குருஜி, கடும் மழையில் என் வி
சேதமாயிற்று.''

''பாவிகளை இறைவன் தண்டிப்ப
இயற்கையே!''

''உங்கள் ஆசிரமும் தரை மட்டமா
விட்டது.''

துணுக்குற்ற துறவி சமாளித்தார்:

''உண்மையான பக்தர்களை ஆண்டவ
சோதிப்பது என்ன புதிதா?''

- ஆர். ஷாலினி, பெங்களூ

●

''முன்னே, பின்னே முரணா சொ
வதோ, மாற்றிச் சொல்வதோ, எங்க பர
பரையிலே கிடையாது. முன்பு பாட்
சொல்ல, அன்று அம்மா சொல்ல
இன்று நான் சொல்கிறேன். நாற்ப
தைந்து ஆண்டுகளுக்கு முன்னே
என்ன சொன்னேனோ அதைத்தா
இன்றும் சொல்கிறேன். என் வய
பதினாறு'' - மார்க்கண்டேயின்
பட்டம் பெற்ற மாஜி நடிகை
மாலா பரபரப்பு பேட்டி.

- சி.என்.ஸ்ரீனிவாசன்
சென்னை -

●

''அஞ்சு லட்சம் வேணாம்னு
சொல்லிட்டு, தொடர்ந்து விளை
யாடி, கடைசியில் ஒரு ரூபா
ஜெயிச்சிருக்கீங்களே, இப்ப உங்
மனநிலை என்ன?''

''கடைசிவரைக்கும் போரா
நான் ஜெயிச்ச இந்த ஒரு ரூபா



# ரெண்டு பேருக்




ஒரு கோடிக்குச் சமம். அதனால நான் ரொம்ப ரொம்ப சந்தோஷமாயிருக்கேன்.''

ரவியின் பதில் கைத்தட்டல்களை வாரிக்கொண்டது.

**- மலை அரசன், அருகந்தம்பூண்டி**

●

**பி**ரபல நடிகரின் புதுப்படம் ரிலீஸ். ஆள் உயர கட்-அவுட்டுக்குப் பால பிஷேகம். ரசித்துக்கொண்டிருந்த மாரியை அஞ்சலை உலுக்கினாள்.

''ஹோட்டலுக்கு வச்சிருந்த பாலை வித்துட்டியே... புதுசா சினிமா பைத்தியம் வந்துருச்சா? ஏன்யா புத்தி கெட்டுப் போச்சு.''

''அடியே பல்லி விழுந்த பாலை வித்து, காசாக்கிட்டேன். புடி....'' சிரித்தான்.

**- என்.சாந்தினி, மதுரை - 9**

●

''**ஹ**லோ ஜோசியரா! தொழிலதிபர் இருதயராஜ் பேசறேன். போன வருஷம் 'நீங்க சிறைவாசம் அனுபவிப்பீங்க'ன்னு சொன்னீங்க. ஞாபகமிருக்கா?''

''ஓ... இருக்கே!''

''இப்ப நான் கோடீஸ்வரன். பங்களா வில 'ஏ டு இஸட்' எல்லாம் உண்டு. வெளியே போறதே இல்லை. ஹாப்பியா இருக்கேன். உங்க ஜோசியம் தப்புதானே!''

''இல்லை... நீங்க இருப்பது தங்கச் சிறையே!''

**- டி.வி.சுரேந்தர், சென்னை - 83**

●

**ஹா**ஸ்பிடலில் உயிருக்குப் போரா டிய கணவன், கடைசியாக தன் மனைவி யிடம் பேசிவிட்டு இறந்தான்.

கணவனைப் பறிகொடுத்து வீடு திரும்பிய மனைவி, அல மாரியில் சில மாத்திரைகளோடு, ஒரு கடிதத்தைக் கண்டாள்.




அதில் எழுதப்பட்டிருந்தது:

''அழுதால் உடம்புக்குச் சேராது. இதை எடுத்துக்கோ!''

**- கவின் டோனி மார்ஷ், மதுரை - 10**

''இந்தா, என் முன்னாள் காதலி உன் இன்னாள் மனைவியின் காதல் மெஸேஜ்கள்.''

''பிளாக்மெயிலா?''

''நோ. உன் பணம் என் கால் தூசு. என்னை ஏமாத்தினவ அழணும்!''

வந்தவன் எறிந்து சென்ற 'செல்'லை உடைத்துப் போட்டான் சேதுராம்.

'நல்லவேளை அண்ணன் சீதாராம் ரூமுக்குப் போகாம தவறி இங்கே வந்தான். என் அண்ணி இனி நிம்மதியா இருக்கட்டும்.'

**- முத்துலக்ஷ்மி சங்கரன், சென்னை-20**

●

''ரெண்டு பேரும் ஓடிரலாமா?''

''போ, பயமாயிருக்கு!''

''முதல்ல அப்படித்தான் இருக்கும். சும்மா வா!''

''எதுக்கும் எங்க வீட்டுல சொல்லிப் பார்க்கவா?''

''ஒண்ணும் வேணாம்! படிப்புதான் முக்கியம்பாங்க!''

''ஒரே யோசனையா இருக்கு!''

''தைரியமா வா! ரெண்டு பேரும் ஓடிரலாம்!''

இருவரும் அறைக்குள் சென்றனர் ஓட்டப்பந்தயதுக்குப் பெயர் கொடுக்க.

**- பா.பனிமலர், மதுரை - 14**

●

மருத்துவமனையில் வலி பொறுக்க இயலாமல் நொடிக்கொரு தரம் போய் ஊழியரை நச்சரித்தார் சாரங்கன். வரிசைப்படி அனுப்புவதில் தீர்மானமாய் இருந்தான் அவன். அவரின் முறை வந்தது. பத்து நிமிடமாக வீறிட்டு அழுதிருந்த அந்தக் குழந்தையைப் போகச் சொல்லிவிட்டு வலியுடன் அமர்ந்தார் திருப்தியுடன்.

**- பவித்ரா நந்தகுமார், ஆரணி**

●

''கும்பகர்ணன் பல்லிடுக்கு மட்டுமே மூணு மைலு!'' - அசராமல் எதையாவது 'அளக்கும்' தாத்தா; 'ஆ'வெனப் பார்க்கும் பொடிசுகள்! திண்ணையில் தினமும் வாடிக்கை!

''மழைல நனைஞ்சாவது கதை சொல்லியே தீரணுமா அவரு?'' கத்தினேன். பாட்டி, ''விடுடா! மழையும் ஒரு சவுகரியம்..! அழறதே தெரியாம அழ! தன் 'சொந்தக் கதை'யேல்ல ஒடுது இன்னைக்கு?!''

**- ரோஷிணி, தஞ்சாவூர்**



## நூல் விமர்சனம்

# ஆராய்ச்சித் தாகம்

**இ**லக்கிய ஆராய்ச்சி வெளியீடு: சபரிநாதன் பதிப்பகம், உடுமலைப் பேட்டை. தொடர்பு முகவரி: எண்:40 சிங்கப்பூர் நகர், உடுமலை-642 126 அன்பளிப்பு: ரூ.50/-

திறனாய்வு எனப்படுகின்ற விமர்சனக் கலைக்கு என்றுமே தனித்த மரியாதை உண்டு. தவிர, விமர்சனங்களே ஒரு பொருளைப் பற்றிய தெளிவையும், அதன் இன்னொரு பரிமாணத்தையும் பற்றி உணர்த்துகின்றன. அந்த வகையில், இலக்கிய ஆய்வுகளுக்கான தொகுப்பிதழாக வெளிவந்திருக்கிறது இந்தப் புத்தகம். நாட்டுப்புற இயலில் பெரும் ஆய்வுகளைச் செய்த நா. வானமாமலை, எழுத்தாளர் சுஜாதாவின் விமர்சனப் பார்வை, பாரதியின் முரண், தமிழ் இலக்கியங்களில் இன உணர்ச்சி... இப்படி பல தலைப்புகளில் பலர் எழுதிய ஆழமான ஆய்வுக் கட்டுரைகள். முனைவர் இந்திரசித்து மேற்கொண்டுள்ள அருமையான முயற்சி!

**உ**ப்பு பொம்மைகள் ஆசிரியர்: ந.க.துறைவன் வெளியீடு: உதயக் கண்ணன், எண்.10, கல்யாணசுந்தரம் தெரு, பெரம்பூர், சென்னை- 600 011.

எழுத்தின் பல்வேறு வடிவங்களில், கவிதை மிக மிகச் சுகமானது. அதைவிட ஹைக்கூ இன்னும் சுவாரஸ்யமானது. மழை நேரத்து இருள்வானில் சட்டென்று தோன்றி மறையும் மின்னலின் வசீகர வெளிச்சம் ஒரு ஹைக்கூ போன்றது. அதை தம்முடைய புத்தகத்தில் வெளிப்பட வைத்திருக்கிறார் கவிஞர்.

'உயிலுக்கு உயிர் வந்தது, அப்பா உயிர் பிரிந்த பிறகு'. அதிரும் முரண்! இப்படி புத்தகம் நெடுக சரேலென்று சிதறிக் கிடக்கின்றன பூக்கள்.

**வெ**ற்றிக்கனி ஆசிரியர்:மா.முருகப்பன். வெளியீடு: கலா கருணா பப்ளிகேஷன்ஸ், எண்.11 முதல் தெரு, பக்தவச்சலம் நகர், அடையாறு, சென்னை-600020.

வெற்றி- ஒவ்வொரு மனமும், ஒவ்வொரு மனிதனும் விரும்புகின்ற பொருள் இதுதான். 'அந்த வெற்றியை எல்லாருமடைய முடிவதில்லையே. ஏன்?' என்ற வினாவை எழுப்பிக் கொண்டு படிக்க ஆரம்பித்தால், அடுக்கடுக்கான உதாரணங்களைச் சொல்லி கையைப் பிடித்து அழைத்துக் கொண்டுபோகிறது இந்த நூல். மனத் தளர்ச்சியைப் போக்கி, தன்னம்பிக்கையும், துணிவும் தரும் எழுத்து. இளைஞர்கள் அவசியம் வாசிக்க வேண்டிய புத்தகம்.

– ராகவன்ஜி



✉ ஃபர்ஸ்ட் ஃபிரேமிலிருந்து கடைசி ஃபிரேம் வரைக்கும் கல்கியில் சினிமா ஸ்பெஷல் சூப்பராக இருந்தது. ஒவ்வொரு 'டேக்'கும் ஓ.கே! எல்லா சென்டர்களிலும் விரும்பி பார்த் (படித்) தனர். ரசித்தனர்.

- ப.கோபிபச்சமுத்து, கிருஷ்ணகிரி - 1

✉ கார்த்தி சார் நல்லாக் கதை அளக்கிறீங்க. சிவகுமார் குடும்பத்துக்கு பொண்ணு தர நான் நீன்னு போட்டி போட்டுக் கொடுப்பாங்களே...'ம்'னு ஒரு வார்த்தை சொல்லுங்க... பொண்ணு ரெடி.

- எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்

✉ வாமன தேசங்கள்... குட்டி நாடுகளைப் பற்றி சுவையான தகவல்களைத் தரும் ஜி.எஸ்.எஸ் பாராட்டுக்குரியவர்!

- ஆர்.விஸ்வநாதன், சென்னை - 78

✉ ரீல் நியூஸ் ரியலுங்க - படிக்க,

# ஒவ்வொரு 'டேக்'கும் ஓ.கே.!

னிமா 'ரீல்' மாதிரி 'திரில்'லா இருந் துங்க!

**ஆர்.ரங்கநாதன், சென்னை-17**

✉ ''எல்லோரும் எம்.ஜி.ஆர். ஆகி ட முடியாது'' என்பதை, எஸ்.ஏ.சந்திர சகர் தன் மகனுக்கு எடுத்துக்கூற மறந்து ட்டாரே! தெருப் புழுதியை தன் தலைப் ல் அள்ளிப்போட்டு இந்தத் தத்தளிப்பு ன்?

**தா.ஆசீரர்டேவிட், நாகர்கோவில் - 1**

✉ ஏழுமலையான் புகழ் பாடும் பாடல் ருக்கு, ஏ.ஆர்.ரஹ்மான் இசையமைப்பது றித்த கேள்விக்கான 'தராசு' பதில் - மதங் ளைக் கடந்த நிஜம்..!

**- எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்**

✉ ஷாப்பிங்மேனியா படிப்பதற்கு மாஷாக இருந்தாலும், அதிலும் சிந் க்க நிறைய விஷயங்கள் சிதறிக் கிடந் ன.

**- லதா ராஜகோபால், சென்னை - 24**

✉ இசை மேதைகளுக்கு விருதுகளை ழங்கிக் கௌரவித்த கல்கிக்கு விருது காடுக்காம இருக்க முடியுமா? இதோ ாசகர்கள் சார்பில் உங்களுக்கு 'விருது ாமணி' பட்டத்தை வழங்கிப் பாராட்டு றோம்!

**- எஸ்.கோபாலன், நங்கநல்லூர்**

✉ அறியாத கடவுளின் பன்முகத்தை றிமுகப்படுத்திய அன்னையே... கடவுள் கமாகக் காட்சியளிப்பதான விந்தை ரியும் ரமேஷ் அனந்தபத்மனாபனது விதை (முகம்!) மனத்தைக் கட்டிப் பாடுகிறது!

**- இனாம் கேசவன், குருமலை**

✉ அறந்தை மணியன் கூறுவது போல - 'என்ன கதை இங்கு இல்லை, ஏன் சுட வேண்டும் வேற்று மொழிப் படங் களை?' என்ற வாதம் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய ஒன்று.

**- ரேவதிப்ரியன், ஈரோடு - 1**

✉ பிற மாநிலங்களில் வாழும் எங் களைப் போன்ற தமிழ் வாசகர்களுக்கும், படைப்பாளிகளுக்கும் 'கல்கி' சிறப்பிதழ் வழங்குவது எப்போது என்று எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறோம்.

**- ஆர். ராஜலட்சுமி, ஹூப்ளி**

✉ கிரிக்கெட்டும், சினிமாவும் கோடி களில் புரளுவதால் இரண்டையும் பிரிக்க முடியாமல் இருக்கிறதோ என்கிற எண்ணம்தான் தோன்றுகிறது.

**- பி.ஹேமாம்புஜம், சென்னை- 17**

✉ வாசகர்களின் 'இதயம் தொட்ட இசை' சூழ்நிலைகளுடன் விளக்கியதைப் படித்தபோது எங்கள் இதயங்களும் களவு போயின.

**- உமா மோகன்தாஸ், திண்டுக்கல்**

✉ சன் பிக்சர்ஸ், தன் தந்தை என்று, எடுப்பார் கைப்பிள்ளையாக இல்லாமல் சுயமுடிவு எடுக்க வேண்டிய கட்டாயத்தில் உள்ளார் விஜய்.

**- ஆர். நாகராஜன், சென்னை - 117**

✉ கரும்புள்ளி விழப் பெற்றவர் களையும், கறை படிந்தவர்களையும் மத்திய அரசு மறந்தும் ஆளுநராக நியமித்து விடக் கூடாது என தலையங்கம் அடித்துக் கூறுவது நூற்றுக்கு நூறு பொருத்தமானது.

**- ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்**

புதிதாக வீடு கட்டும் பொழுதும், நம் வீட்டிற்கே புதிதாக நாம் பெயிண்ட் அடிக்கும் பொழுதோ, 'கலர் சூஸிங்' என்பது பல சமயங்களில் பெரிய கன்ஃப்யூஸிங் சமாச்சாரமாகப் போய் விடுவதுண்டு.

எந்த நிறத்தைத் தேர்ந்தெடுத்தால், நம் வீடு 'பளிச்' பரிமளா கணக்காக இருக்கும், எந்த நிறத்தை தேர்ந்தெடுத்தால் நம் மனதும் வீடும்



# சவாலைத் தூண்டும் கலர்!

சேர்ந்தே டபுள் பளிச்சென மாறும் எனப் பட்டியலிட்டே தருகின்றனர் இன்டீரியர் டிசைனிங் துறை வல்லுனர்கள்... அதில் சில:

**மஞ்சள்:**

உற்சாகத்தையும், அதிக எனர்ஜியையும் சேர்த்துக் கொடுக்க வல்லது இந்த மஞ்சள் நிறம். சமையலறை, குளியலறைகளுக்கு ஏற்ற நிறம் இந்த மஞ்சள் நிறம் என்றாலும், உளவியல் ரீதியாக ஆராய்ந்து பார்த்ததில் மஞ்சள் நிறம் தோன்றும் இடங்களில் உள்ள பிஞ்சுக் குழந்தைகளுக்கு என்னவோ காரணமே புரியாமல் தெரியாமல் அழுகை பன்மடங்காகி விடுகிறதாம் எனவே கூடியவரை இருப்பதா ஒருவரின் வீட்டு ஹாலிலோ அல்ல நுழைவு வாயிலிலோ மஞ்சள் நிறத்தை தப்பித் தவறி அடிக்க வேண்டாம்.

**நீலம்:**

ஒருவரை அமைதிப் படுத்தி, அவ சாந்த சொரூபியாக மாற்றக் கூடி ஆற்றல் படைத்ததாம் நீ நிறம். அதிக அளவு விரு தினர்கள் வந்து கூடு ஹாலிலோ அல்லது சா பாடு அறையிலோ நீலத்ை தாராளமாக பயன்படு தலாமாம்.

**பச்சை:**

நல்ல நேர்மறையா சிந்தனைகளைக் கொடுத்து ஒருவரது மன அழுத்தத்ை குறைக்கக் கூடிய தன்மை வாய் தது.

**சிவப்பு:**

அதிகபடியான எனர்ஜியை உண் செய்ய கூடிய தன்மை பொருந்திய இந் நிறத்தை, பார்ட்டி ஹாலில் வேண்டும னால் அடித்துக் கொள்ளலாமே தவி தப்பித்தவறி பாட்டி ஹால் சுவற்றுக்கு அடித்து, பாட்டியின் ஹார்ட் பீட் அளவை அதிகப்படுத்தி விடாதீர்கள்.

**ஆரஞ்சு:**

குறிப்பாக, 'நல்லா உடற்பயிற்சி செஞ்சு ஊளைச் சதைகளை உண்டு இல்லன்னு ஆக்கிடணும்' என மனதில் ஒரு சவாலோடு இருப்பவர்களின் நினைப்பை தூண்டக்கூடிய நிறம் இது.

**– நளினி சம்பத்குமார்**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 - 11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.